உ

சிவ சிவ

# திருப்புலியூர் வெண்பா

(மூலமும் உரையும்)

ஸ்ரீ குமரகுருபர சுவாமிகள் 271-ம் ஆண்டு
நினைவு நாள் வெளியீடு
24-5-1959



ஸ்ரீ குமரகுருபரன் சங்கம் : : ஸ்ரீவைகுண்டம்

உ

திருப்பனந்தாள் ஸ்ரீ காசி மடம்

# திருமுறை வெளியீடுகள்

| | | ரூ. | ந. பை |
|---|---|---|---|
| 1 | விநாயகர் திருமுறை ... ... ... | 0 | 06 |
| 2 | ஸ்ரீ குமரகுருபர சுவாமிகள் பிரபந்தத் திரட்டு டாக்டர் சாமிநாத ஐயர் குறிப்புரையுடன் ... | 6 | 00 |
| 3 | சிவக்கொழுந்து தேசிகர் பிரபந்தம் ... | 3 | 00 |
| 4 | திருஞானசம்பந்தர் தேவாரம் (மூலம் மட்டும்) ... | 2 | 50 |
| 5 | திருநாவுக்கரசர் தேவாரம் ,, ... | 2 | 25 |
| 6 | சுந்தரர் தேவாரம் ,, ... | 1 | 30 |
| 7 | திருவாசகம் (புதிய பதிப்பு) ,, ... | 0 | 60 |
| 8 | திருக்கோவையார்-பேராசிரியர் உரையுடன் ... | 2 | 00 |
| 9 | ஒன்பதாம் திருமுறை-திருவிசைப்பா திருப்பல்லாண்டு (மூலம் மட்டும்) ... | 0 | 56 |
| 10 | திருமந்திரம் ,, ... | 2 | 50 |
| 11 | பதினோராந் திருமுறை ,, ... | 1 | 25 |
| 12 | அம்மையார் அற்புதத் திருவந்தாதி (புதிய பதிப்பு) | 0 | 25 |
| 13 | திருக்கைலாய ஞானவுலா-உரையுடன் ... | 0 | 50 |
| 14 | பெரிய புராணம் (மூலம் மட்டும்) ... | 2 | 50 |
| 15 | அகத்தியர் தேவாரத் திரட்டு ... | 0 | 37 |
| 16 | திருவிளையாடற் புராணம் (மூலம் மட்டும்) ... | 3 | 00 |
| 17 | தாயுமான சுவாமிகள் பாடல்-குறிப்புரையுடன் ... | 1 | 25 |
| 18 | கந்தபுராணச் சுருக்கம் (மூலம் மட்டும்) ... | 1 | 75 |
| 19 | கந்தபுராணம் முதல் மூன்று காண்டங்கள் ,, ... | 2 | 75 |
| 20 | ,, யுத்த காண்டம் ,, ... | 2 | 00 |
| 21 | ,, தக்ஷ காண்டம் ,, ... | 1 | 50 |
| 22 | கந்தபுராண வசனம் ... | 2 | 50 |
| 23 | கந்தர் அலங்காரம்-குறிப்புரையுடன் ... | 0 | 25 |
| 24 | கந்தரநுபூதி ... ... | 0 | 13 |
| 25 | கந்தர் கலிவெண்பா-மூலம் மட்டும் ... | 0 | 06 |
| 26 | கந்தர் கலிவெண்பா, மூலமும் உரையும் ... | 0 | 37 |
| 27 | நீதிநெறி விளக்கம்-ஆங்கிலம் ஹிந்தி மொழி பெயர்ப்புக்களுடன் ... | 0 | 50 |
| 28 | சகலகலாவல்லி மாலை-ஆங்கிலமும் ஹிந்தியும் ... | 0 | 06 |

உ

சிவ சிவ

திருச்சிற்றம்பலம்

# திருப்புலியூர் வெண்பா

(மூலமும் உரையும்)

ஸ்ரீ குமரகுருபர சுவாமிகள் 271-ம் ஆண்டு
நினைவு நாள் வெளியீடு

*திருப்பனந்தாள் ஸ்ரீ காசி மடத்து அதிபர்*

ஸ்ரீலஸ்ரீ காசிவாசி அருள்நந்தித் தம்பிரான் சுவாமிகள்

*அவர்களின் பொருளுதவியாலும் ஆணையின் வண்ணமும்*
*வெளியிடப் பெற்றது.*

*பதிப்பாசிரியர்*

T. M. குமரகுருபரன் பிள்ளை, B. A., B. L.,
நிரந்தரத்தலைவர்
ஸ்ரீ குமரகுருபரன் சங்கம், ஸ்ரீவைகுண்டம்

விலை ரூ. 0–25

முதற்பதிப்பு
மே, 1959; 1000 பிரதிகள்

ஸ்ரீ குமரகுருபர சுவாமிகள் அருளிய

# சிதம்பரச் செய்யுட்கோவை

வாழி திருமன்றம் கண்ட மலர்க்கண்கள்
வாழி பெருமான் புகழ்கேட்ட வார்செவிகள்
வாழி யவனை வணங்கு முடிச்சென்னி
வாழியவன் சீர்பாடும் வாய்.

---

குறிப்பு: இப்புத்தகத்தின் விற்பனைத்தொகை ஸ்ரீவைகுண்டம் ஸ்ரீ குமரகுருபர சுவாமிகள் ஆண்கள் உயர்நிலைப் பள்ளியைச் சாரும். புத்தகம் வேண்டுவோர், "தலைமையாசிரியர், ஸ்ரீ குமரகுருபர சுவாமிகள் உயர் நிலைப்பள்ளி, ஸ்ரீவைகுண்டம் (திருநெல்வேலி ஜில்லா)" என்ற முகவரிக்கு விலை ரு. 0–25-ம் அஞ்சல் செலவு ரு 0–11-ம் அனுப்பி விலைக்குப் பெறலாம்.

உ
சிவ சிவ

# பதிப்புரை

*"தீர்த்த மென்பது சிவகங் கையே*
*ஏத்த ருந்தலம் எழிற்புலி யூரே*
*மூர்த்தி அம்பலக் கூத்தன துருவே"*

என்று ஸ்ரீ குமரகுருபர சுவாமிகள் அருளிய சிதம்பரச் செய்யுட் கோவைத் திருப்பாடலால் மூர்த்தி தலம் தீர்த்தங்களினுல் சிறப்புற்று இலங்குவது சிதம்பரம் என்பது தேற்றம். இந்தச் சிறந்த தலத்தின்கண் வீற்றிருந்து ஸ்ரீ குமரகுருபர சுவாமிகள் சிதம்பரச் செய்யுட்கோவை, சிதம்பர மும்மணிக்கோவை முதலிய நூல்களை இயற்றியுள்ளார். இத்தலத்தின் பேரில் பலகாலங்களில் பல புலவர்கள் பல நூல்களைப் பாடியுள்ளனர். அவற்றுள் ஒன்று திருப்புலியூர் வெண்பா. இது தில்லைவிடங்கன் மாரிமுத்தாப் பிள்ளை அவர்களால் இயற்றப் பெற்றது. இவர் கி. பி. 1732 முதல் 1787 வரை வாழ்ந்தவர்.

திருப்புலியூர் வெண்பா, திட்பநுட்பஞ் செறிந்த நூறு வெண்பாக்களாலாயது. முதல் இருபத்தைந்து வெண்பாக்களும் சிதம்பர மகிமை கூறுதலோடு பின் இரண்டடிகளில் திரிபுநயம் பொருந்தியுள்ளன; அடுத்து இருபத்தைந்து வெண்பாக்களில் பின் இரண்டடிகள் யமக வணி பயின்றுள்ளன; 51 முதல் 75 வரையுள்ள வெண்பாக்கள் முதலடியில் கூறப் பெற்ற செய்திகளுக்கு இரண்டாவது அடி சிலேடை பொருந்த உள்ளன; இறுதி இருபத்தைந்து வெண்பாக்களில் முதலடி சிலேடையாக அமைத்துச் "சிலேடை ஏதுவாகச் சாதிக்கப்பட்ட உவமையணி" பொருந்தியுள்ளது. இங்ஙனம் நான்கு வகையாக இந்நூலமைப்புள்ளது என்று இவ்வாசிரியரே இறுதியில் ஒரு பாடலில் கூறியுள்ளார்.

இந்நூற் பாடல்களில் எல்லாம் இடையீடின்றி நாயன்மார்கள் வரலாறுகளும், சைவ சமய சந்தானகுரவர், சேக்கிழார், தாயுமானுர் போன்ற சைவப் பெரியார்களின் வரலாறுகளும் குறிக்கப் பெற்றுள்ளன. இந்நூலைப் படிக்குந் தொறும் படிக்குந் தொறும் பக்திச் சுவை ஊற்றெடுக்கும்,

இந்நூலைக் கற்றோரேயன்றி மற்றோரும் எளிதில் பொருள் அறிந்து கொள்ளும் வண்ணம் திரு. தி. சு. வேலுசாமிப் பிள்ளையவர்கள் ஒரு அரிய உரையியற்றினார்கள். இவர் இந்நூலாசிரியருடைய பேரனார்க்குப் பேரனார். இவர் யாத்த உரையுள் விசேடவுரைகள் பலவும் நீங்கலாகப் பதவுரைமட்டும் இவ் வெளியீட்டில் அச்சிடப் பெற்றுள்ளது; ஒருசில இடங்களில் மட்டும் விசேடவுரையும் சேர்க்கப் பெற்றுள்ளது.

சிதம்பரத்தைப் பற்றிய இச்சிரிய நூலைச் சைவமக்கள் படித்துப் பயன்துய்க்க வேண்டும் என்ற எண்ணத்தினால் இந்நூல் அச்சிடப் பெறுவதாயிற்று. இதனை அச்சிடுவிக்கப் பொருளுதவி செய்தவர்கள், திருப்பனந்தாள் ஸ்ரீ காசிமடத்து அதிபர் ஸ்ரீலஸ்ரீ காசிவாசி அருள்நந்தித் தம்பிரான் சுவாமிகள அவர்கள் ஆவர். பன்னிரு திருமுறைகளையும், திருக்குறளையும், திருவிளையாடற் புராணம் கந்தபுராணம் முதலிய அரிய நூல்களையும் அச்சிடுவித்து அடக்க விலைக்குக் கொடுத்தருளும் ஸ்ரீலஸ்ரீ காசிவாசி சுவாமிகள் அவர்கள் இச்சிறு பிரபந்தத்தையும் சைவ மக்களுக்கு அருளுவது குறித்துச் சைவ உலகம் நன்றி செலுத்தும் கடப்பாடுடையது. சிதம்பரத்தில் சின்னாள் தங்கியிருந்து நடராசப் பெருமானைத் தரிசனம் செய்து வாழ்ந்த ஸ்ரீ குமரகுருபர சுவாமிகளின் 271-ம் ஆண்டு நினைவு மலராக இந்நூலை வெளிப்படுத்துவதற்கு அருளாணை அளித்தமைக்கு ஸ்ரீலஸ்ரீ காசிவாசி சுவாமிகள் அவர்களுக்கும் அவர்கள் அருள் வழியொழுகும் ஸ்ரீ காசிமடம் இளவரசு, ஸ்ரீமத் மகாலிங்கத் தம்பிரான் சுவாமிகள அவர்களுக்கும் மனமொழி மெய்களால் ஆய வணக்கங்களைச் செலுத்திக் கொள்கிறேன்.

இந்நூலை அச்சிடுங்கால் அச்சுப்பிரதிகளைத் திருத்தி ஆவன செய்த திருப்பனந்தாள் செந்தமிழ்க்கல்லூரி பிரின்ஸிபால் சிவநெறிச் செல்வர் திரு. K. M. வேங்கடராமையா M. A., B. O. L., அவர்களுக்குச் செந்திலாண்டவன் திருவருள் முன்னிற்க.

*"ஆங்கற் பகக்கன் றளித்தருளும் தில்லைவனப்*
*பூங்கற் பகத்தைப் புகழ்மினோ வம்மின் புலவீர்காள்"*
*— சிதம்பரச் செய்யுட்கோவை.*

இங்ஙனம்,

ஸ்ரீவைகுண்டம் } T. M. குமரகுருபரன் பிள்ளை B.A., B.L.,
26—5—'59 } *நிரந்தரத்தலைவர், ஸ்ரீ குமரகுருபரன்சங்கம்*

உ
சிவ சிவ
திருச்சிற்றம்பலம்

# திருப்புலியூர் வெண்பா

## மூலமும் உரையும்



காப்பு

**கற்பகப்பிள்ளையார் துதி**

நேரிசை வெண்பா

பொன்னாரும் தில்லைப் புலியூர்வெண் பாவுக்குப்
பன்னாளு மேத்திப் பணிகுவாம் — நன்னாறி
கக்குஞ் சரப்பூங் கடுக்கையா னீன்றகற்ப
கக்குஞ் சரப்பூங் கழல்.

*(இதன் பொருள்) பொன்-அழகு, ஆரும்-நிறைந்த, தில்லை-தில்லையாகிய, புலியூர்வெண்பாவுக்கு-திருப்புலியூர்வெண்பா வென்னும் பிரபந்த முற்றும் பொருட்டு, நல் - நல்ல, நாறி-தேனை, கக்கும்-துளிக்கின்ற, சரம்-சரமாகிய, பூ-பொலிவினை யுடைய, கடுக்கையான் - கொன்றைமாலையைத் தரித்த சிவ பெருமான், ஈன்ற-பெற்றருளிய, கற்பகக்குஞ்சரம் - கற்பக விநாயகரது, பூ கழல் - தாமரை மலர்போன்ற திருவடிகளை, பல் நாளும்-பலநாளும், ஏத்தி - துதிசெய்து, பணிகுவாம் - வணங்குவாம்.*

*இரந்தார்க்கு வேண்டிய வேண்டியாங்குதவுந் தன்மை யராதலின் தலவிநாயகர் கற்பகவிநாயகரெனத் திருநாமம் பெற்றனர். வியாக்கிரபாத ரிருந்து பூசித்துத் திருவருள் பெற்ற தலமாதலால் சிதம்பரத்தைப் புலியூரென்றது காரணப் பெயர்.*

## நூல்

சொற்சேறிவே தாந்தச் சுடர்த்தகர வித்தையதாம்
பொற்சபைநின் றோங்கும் புலியூரே — முற்சமனை
வீசுபதத் தானடித்தார் விற்கோண் டமர்விளைத்த
பாசுபதத் தானடித்தார் பற்று.

(இ-ள்) சொல்-(பயன்படு) சொற்கள், செறி-(பொருளுக்கேற்ப) பொருந்திய, வேதாந்தம்-வேதத்தின்முடிவாகிய உபநிடதத்திற் சொல்லப்பட்ட, சுடர்-பிரகாசத்தையுடைய, தகரவித்தை அது ஆம்-சிதாகாசமாகிய, பொன்சபை-கனக சபை, நின்று - நிலைபெற்று, ஓங்கும - சிறந்தோங்காநின்ற, புலியூர்-திருப்புலியூரானது, முன் - முற்காலத்தில், சமனை - இயமனை, வீசு-உதைத்தருளிய, பதத்தால் - திருவடியால், நடித்தார் - திருநடனம புரிந்தவரும, வில்கொண்டு - வில்லை யேந்தி, அமர்விளைத்த - போர்செய்த, பாசுபதத்தான் - தம் பால் பாசுபதாஸ்திரம பெற்ற அருச்சுனனால், அடித்தார் - அடிக்கப்பட்டவருமாகிய நடேசப்பெருமானுடைய, பற்று- இடம.

தகரவித்தை - சிதாகாசமெனப்பொருள்படும். இதனை விரிக்கிற்பெருகும். இதைப்பற்றி எசுர்வேதத்திலும, அஞ்சுமான் ஆகமத்திற் சிற்சபாபிரதிஷ்டாபடலத்திலும், வாதுளோத்தரத்திலும், யோககுண்டிகையிலும், சாந்தோக்கிய உபநிடதத்திலும, சூதசங்கிதையிலும வேதாந்தப் பிரகரணத்திலும விரிததுரைக்கப்பட்டிருக்கின்றது. அங்குக் கண்டு கொள்க. (1)

தன்கரும நீத்ததுன்ம தன்முனடங் காணநிரம்
புங்கதியைத் தந்த புலியூரே — கங்கையதி
மோகரத்தர் மாசடையார் மோதலையுப் பற்றவருட்
சாகரத்தர் மாசடையார் சார்பு.

(இ-ள்) முன் - முற்காலத்தில், தன் - தன்னுடைய, கருமம்-(குலத்துக்குரிய) நித்தியகருமங்களை, நீத்த - ஒழித்த, துன்மதன் - துன்மதனென்னும் பிராமணன், நடம் - திரு நடனத்தை, காண - தரிசிக்க, நிரம்பும் - இன்பநிறைந்த, கதியை-மோக்ஷத்தை, தந்த-கொடுத்தருளிய, புலியூர்-திருப் புலியூரானது, கங்கை-கங்காதேவியினிடத்தில், அதிமோகர்-அதிகவிருப்பத்தையுடையவரும், அத்தர் - யாவருக்கும் தந்தையானவரும், மாசடையார் - பெருமைதங்கிய சடையையுடையவரும், மோது - மோதுகின்ற, அலை - அலையினையும், உப்பு-உப்பையும், அற்ற-ஒழிந்த, அருள்சாகரத்தர்-கருணைக் கடலாயுள்ளவரும், மாசு அடையார்-இயல்பாகவே பாசத்தினின்று நீங்கினவருமாகிய நடேசப்பெருமானுடைய, சார்பு-இடம்.

தற்போதமாகிய அலையும் மலமாகிய உப்பும் இலதாதலின் திருவருட் கடலைக், காணப்படுங் கடலினின்று நீக்கற்பொருட்டு 'மோதலையுப்பற்றவருட் சாகரத்த' ரென்றார். (2)

பாதகஞ்செய் துற்சகனும் பண்டிறக்கக் கண்டுகதி
போதவுவந் திட்ட புலியூரே — வேதன்
சிரமதலை யக்கணித்தார் சேர்த்துநர சிங்கத்
துரமதலை யக்கணித்தா ரூர்.

(இ-ள்) பாதகம்-பஞ்சமாபாதகங்களை, செய்-செய்த, துற்சகனும் - துற்சகனென்னும் வேடனும், கண்டு-(திரு நடனத்தைத்)தரிசித்து, இறக்க-இறப்ப, போத-மிக, உவந்து-மகிழ்ந்து, கதி-சிவகதியை, பண்டு-முற்காலத்தில், இட்ட-கொடுத்தருளிய, புலியூர்-திருப்புலியூரானது, மதலை-கொன்றைமலரோடு, வேதன் - பிரமனுடைய, சிரம் - தலையையும், அக்கு - என்பினையும, அணி - அழகிய, தார் - மாலையாக, சேர்த்து-சேர்த்தணிந்து, நரசிங்கத்து-நரசிங்கத்தினது, உரம்

*அது அலைய -வலிமைகுலைய, கணித்தார் - செய்தவருமாகிய நடேசப்பெருமானுடைய, ஊர்-திருநகர்.* (3)

நற்கதியைத் துற்றேரிச னன்மறையோ னுட்களிக்கப்
பொற்குடையா னல்கும்* புலியூரே — சொற்கிளர்நா
லாரணமா றங்கத்த ரம்பவள மேனியிலோர்
நாரணமா றங்கத்தர் நாடு.

(இ-ள்) *பொன்குடையால் - அழகிய குடையினால், மறையோன் - பிராமணன், உள்களிக்க - மனமகிழ, துற்றேரிசனன் - (அதனைக்கொடுத்த) துற்றேரிசனென்னும் வேடனுக்கு, நல்கதியை - நன்மையாகிய மோக்ஷத்தை, நல்கும் - கொடுத்தருளிய, புலியூர் - திருப்புலியூரானது, சொல்கிளர் - பயனுடைச் சொற்கள் விளங்குகின்ற, நால் ஆரணம - நான்கு வேதங்களையும், ஆறு அங்கத்தர் - ஆறு சாத்திரங்களையும அருளினவரும், அம்-அழகிய, பவளம் - பவளமபோன்ற நிறத்தினையுடைய, மேனியில்-திருமேனியில், ஓர்-ஒரு, நாரணன்மால்-நாரணனாகிய விஷ்ணு மூர்த்தி, தங்கு- அமர்ந்த, அத்தர்—வலப்பாகத்தையுடையருமாகிய நடேசப் பெருமானுடைய, நாடு-இடம. நாரணமாறங்கத்தர் என்ப தற்கு - அன்புபொருந்த விஷ்ணு மூர்த்தியமர்ந்த பங்கினை யுடையாரென உரைப்பினும் பொருந்தும. இதனை "அரிய வாற்றேவியில்லை யையனையாறனார்க்கே" என்னுந் தமிழ் மறையானுணர்க.* (4)

தாண்டுபுலிக் கால்கையுகிர் தானேர் மழமுநிவன்
பூண்டிருந்தர்ச் சிக்கும் புலியூரே — பாண்டியற்காய்
மாணிக்கங் காட்டினர் மாமறைப்பா லன்பாலால்
வேணிக்கங் காட்டினர் வீடு.

(இ-ள்) *ஓர் மழ முநிவன்-ஒப்பற்ற மழமுநிவர், தாண்டு- பாய்கின்ற, புலி - புலியினது, கால்கை - கால் கைகள், உகிர்*

---

* 'பொற்கொடையா நல்கும்' என்றும் பாடம்.

தான் பூண்டிருந்து - நகங்களோடு தாம்பெற்றிருந்து, அர்ச்சிக்கும் - பூசைசெய்யும், புலியூர் - திருப்புலியூரானது, பாண்டியற்கு-பாண்டியனுக்காக, ஆய்-தெரிந்தெடுத்த, மாணிக்கம் காட்டினார் - (வணிகராகவந்து) மாணிக்கத்தைக் காட்டி அருளினவரும், மா-பெருமை தங்கிய, மறைப்பாலன் - (ஆதிசைவ) பிராமணச்சிறுவர், பால்ஆல்-பாலினால், அங்கு - அவ்விடத்தில், வேணிக்கு - திருமுடியில், ஆட்டினார்-ஆட்டுதலையுடையவருமாகிய நடேசப்பெருமானுடைய, வீடு - திருக்கோயில். (5)

தத்துதிரைப் பாலுததி தன்னையமும் வெம்புலியின்
புத்திரனுக் கீயும் புலியூரே — பத்தித்
தவந்தழைத்த சித்தனார் தாஞ்சமைத்த சேயை
யுவந்தழைத்த சித்தனா ரூர்.

(இ-ள்) தத்து திரை - தாவிவரும் அலைகளையுடைய, பால் உததிதன்னை - பாற்கடலை, அமும் - அமுத, வெம் - விருப்பமாகிய, புலியின் - வியாக்கிரபாதருடைய, புத்திரனுக்கு - புத்திரராகிய உபமன்னிய முனிவருக்கு, ஈயும் - கொடுத்தருளிய, புலியூர் - திருப்புலியூரானது, பத்தி - சிவநேசமாகிய, தவம்தழைத்த - தவம நிரம்பிய, சித்தனார்தாம்-மனத்தையுடையராகிய சிறுத்தொண்ட நாயனார், சமைத்த - பாகமாயமைத்த, சேயை - புத்திரனை, உவந்து - மகிழ்ந்து, அழைத்த - அழைத்தருளிய, சித்தனார் - சித்துத்தொழிலையுடையவராகிய நடேசப் பெருமானுடைய, ஊர் - திருநகர்.

மெய்திகழுஞ் சேடனுரு விட்டுப் பதஞ்சலியாய்ப்
பொய்கையுழி வந்த புலியூரே — வையை
வரம்புகட்டு வாரானார் மாமுனிக்குப் பாற்சா
கரம்புகட்டு வாரானார் காப்பு.

(இ-ள்) மெய்திகழும் - உண்மை விளங்கப்பெற்ற, சேடன் - ஆதிசேடன், உருவிட்டு - தனதுருவைவிட்டு, பதஞ்சலியாய் - பதஞ்சலி முனிவராகி, பொய்கை உழி - பொய்கையினிடமாக, வந்த - வந்தடைந்த, புலியூர் - திருப்புலியூரானது, வையை - வையை நதிக்கு, வரம்பு-அணையை, கட்டுவார் - கட்டினவரும், ஆனார் - இடபத்தையுடையரும், மாமுநிக்கு - உபமன்னியமாமுநிவருக்கு, பால்சாகரம்-பாற்கடலை, புகட்டுவாரானார் - புகட்டுவோருமாகிய நடேசப்பெருமானுடைய, காப்பு - காவல் இடம். (7)

மாசிலா வம்புலிக்கு மாதுமைக்கு மாநடத்தைப்
பூசமதிற் காட்டும் புலியூரே – பேசரிய
வித்தகத்தார் கண்டிறந்தார் வீடுறச்செய் தங்கசற்கா
மத்தகத்தார் கண்டிறந்தார் வாழ்வு.

(இ-ள்.) மாசு - குற்றம், இல்லாத - அடையாத, அம்புலிக்கும் - அழகிய வியாக்கிரபாத முநிவருக்கும், மாது உமைக்கும் - உமாதேவியாருக்கும், மாநடத்தை - பெருமை தங்கிய திருநடனத்தை, பூசம் அதில் - தைப்பூசத்தில், காட்டும் - காட்டியருளிய, புலியூர் - திருப்புலியூரானது, பேச அரிய - சொல்லுதற்கரிய, வித்தகத்தார்-ஞானசொரூபரும், கண்டு இறந்தார் - தரிசித்திறந்தவர்கள், வீடு உற செய்து-மோக்ஷத்தை யடையச் செய்து, அங்கசற்கு ஆக - மன்மதனுக்காக, மத்தகத்து - நெற்றியில், ஆர்-பொருந்திய, கண் - அக்கினி நேத்திரத்தை, திறந்தார் - விழித்தருளினவருமாகிய நடேசப்பெருமான், வாழ்வு - வாழுமிடம். (8)

முன்னாகச் சிங்கவன்மன் மூழ்கச் சிவதடத்திற்
பொன்னாக மாக்கும் புலியூரே – யொன்னார்க்காக்
குன்றுவளை விற்போர் கோளவேடுப்போர் கூடறனிற்
சென்றுவளை விற்போர் செறிவு.

(இ-ள்) சிங்கவன்மன் - சிங்கவருமரென்பவர், முன் ஆக - முற்பட, சிவதடத்தில் - சிவகங்கையில், மூழ்க - ஸ்நானஞ் செய்ய, பொன் ஆகம் ஆக்கும - அவரது தேகத்தைப் பொன்னுருவாகச் செய்தருளிய புலி ர் - திருப்புலியூரானது, வளை - வளைத்த, வில் - வில்லினது, போர்கொள- போரைச் செய்ய, ஒன்னார்க்கு ஆக - (திரிபுராதிகளாகிய) பகைஞரையழித்தற்கு, குன்று - மேருவை, எடுப்போர் - எடுத்தவரும், கூடல் தனில் - மதுரையில், சென்று - (வணிகராகச்) சென்று, வளைவிற்போர்-வளையலை விற்றவருமாகிய நடேசப் பெருமானுடைய, செறிவு-இடம். (9)

அள்ளியவா யோதனமோன் றந்தணன்வாய் வீழ்த்தகோடிப்
புள்ளருள்பெற் றுய்யும் புலியூரே – யுள்ளமது
சோதிக் கவருவார் தோண்டாவோ டுன்வசமேன்
ேறுதிக் கவருவா ரூர்.

(இ-ள்) அள்ளிய - அள்ளிய, வாய் - வாயிலிருந்து, ஓதனம் ஒன்று - ஒரு அன்னத்தை, அந்தணன்வாய் - ஒரு பிராமணன் வாயில், வீழ்த்த - விழும்படி செய்த, கொடிப் புள் - காக்கையானது, அருள்பெற்று - திருவருள்பெற்று, உய்யும் - (பிறப்பினின்று) பிழைத்த, புலி ர் - திருப்புலியூரானது, உள்ளம் அது - (திருநீலகண்டநாயனருடைய) மனத்தை, சோதிக்க வருவார்-சோதனை செய்ய வந்தவராகி, தொண்டா - தொண்டனே, ஓடு - இத்திருவோடு, உன் வசம என்று ஓதி - உன்னுடைய வசத்திலிருக்கக் கடவதென்று கூறி, கவருவார் - பின்பதனைக் கவர்ந்தவராகிய நடேசப்பெருமானுடைய, ஊர் - திருநகர். (10)

சேன்றே நலந்தீது செய்யிலோன்று கோடியதாய்ப்
போன்றாது நீடும் புலியூரே – நின்றாடும்
போன்னம் பலவர் புகன்மறையி னுணரா
வன்னம் பலவர் மனை.

(இ-ள்) சென்று - அடைந்து, நலம் - புண்ணியத்தை யாயினும், தீது - பாதகத்தையாயினும், செய்யின் - ஒருவர் செய்தால், ஒன்று - (அவற்றுள்) ஒன்று, கோடியது ஆய் - கோடியளவினதாகி, பொன்றுது-கெடாமல், நீடும்-விருத்தி யாகும், புலியூர் - திருப்புலியூரானது, நின்று - (முயலகன் மேல் வலத்திருவடியையூன்றி) நின்று, ஆடும் - (இடத்திரு வடியைத் தூக்கி) நடிக்காநின்ற, பொன் அம்பலவர்-கனக சபையையுடையவரும், புகல்-(எடுத்துச்) சொல்லும். மறை யினுல் - வேதங்களினுலும், உணராத - ஆராய்ந்துணரப் படாத, வன்னம் பலவர் - பல நிறங்களையுடையவருமாகிய நடேசப்பெருமானுடைய, மனை-வீடு. (11)

மாக்கள்வினை பால வயிரவன்கைச் சூலத்தாற்
போக்கிநலந் தந்த புலியூரே – சாக்கியர்கன்
மோதக் கனிவிருந்தார் முன்வசிய மாதளித்த
சூதக் கனிவிருந்தார் தோய்வு.

(இ-ள்) மாக்கள் - மக்களுடைய, வினை - தீவினையை, பாலவயிரவன் - பாலவைரவமூர்த்தி, கை - திருக்கரத்தி லேந்திய, சூலத்தால் - சூலத்தினுல், போக்கி - ஒழித்து, நலம் - கதியை, தந்த-கொடுத்தருளும், புலியூர் - திருப்புலி யூரானது, சாக்கியர் - சாக்கியநாயனுர், கல் - கல்லினுல், மோத-அடிக்க, கனிவு இருந்தார் - மகிழ்வோடிருந்தவரும், முன் - முற்காலத்தில், வசியமாது - வைசியகுலத்தராகிய புனிதவதியார், அளித்த - (அன்பால்) படைத்த, சூதக்கனி- மாங்கனியையுண்ட, விருந்தார் - அதிதிவடிவானவருமாகிய நடேசப் பெருமானுடைய, தோய்வு - பிரியா இடம். (12)

சொல்லாச் சிவசன்மா சோமநா தர்க்குவினைப்
பொல்லாங் ககற்றும் புலியூரே – வில்லா

வணக்குஞ் சமர்த்தினார் மாமலைதோண் மேன்மா
சுணக்குஞ் சமர்த்தினார் தோய்வு.

(இ-ள்) சொல்லாத-(சிவநாமத்தைச்) சொல்லாத, சிவசன்மா சோமநாதர்க்கு - சிவசன்மாவுக்கும் சோமநாதர்க்கும், வினைப்பொல்லாங்கு - வினைக்குற்றங்களை, அகற்றும் - நீக்கிய, புலியூர்-திருப்புலியூரானது, மாமலை-மகாமேருவை, வில் ஆக-வில்லாக, வணக்கும்-வளைத்த, சமர்த்தினார் - சமர்த்தினையுடையவரும், தோள்மேல் - தமது திருப்புயங்களின் மீது, மாசுணம்குஞ்சு - பாம்புக்குட்டிகளை, அமர்த்தினார் - அமர்ந்து தங்கச்செய்தவருமாகிய நடேசப் பெருமானுடைய, தோய்வு - பிரியா இடம். (13)

ஆழ்ந்தகடற் செல்வற் கடர்பிரம கத்திதனைப்
போழ்ந்தறுத்தா ளுந்தென் புலியூரே — தாழ்ந்தவரைத்
துய்யகதி யேற்றினார் சோதிவெள்ளி வெற்பனைய
வெய்யகதி யேற்றினார் வீடு.

(இ-ள்) ஆழ்ந்த-ஆழமுள்ள, கடற்செல்வற்கு - சமுத்திரராசனாகிய வருணனுக்கு, அடர் - நெருங்கிய, பிரமகத்திதனை - பிரமஹத்தியை, போழ்ந்து அறுத்து - பற்றறத் தொலைத்து, ஆளும்-அடிமை கொண்டருளிய, தென்புலியூர்-அழகிய திருப்புலியூரானது, தாழ்ந்தவரை-தம்மைவணங்கிய அடியவரை, துய்யகதி - பரிசுத்தமாகிய சிவகதியில், ஏற்றினார் - ஏறச்செய்தவரும், சோதி - பிரகாசத்தையுடைய, வெள்ளிவெற்பு அனைய-கைலாசகிரியை ஒத்த, வெய்ய-வேகமுள்ள, கதி-நடையையுடைய, ஏற்றினார் - விடையையுடையருமாகிய நடேசப்பெருமானுடைய, வீடு-திருக்கோயில். கடற்செல்வன் - மேகங்கள்வழியாக உலகத்திற்கீயும் மிக்க நீர்ச் செல்வத்தையுடைய கடலுக்கதிபதி என்பதாம். (14)

வன்மதிநீ சன்கடனீர் மாசிமகத் தாடவவன்
புன்மைதவிர்த் தாளும் புலியூரே — தென்மதுரைக்
கற்களிறுக் கிக்களித்தார் கானவனேச் சிற்சுவைக்கப்
பற்களிறுக் கிக்களித்தார் பற்று.

(இ—ள்) வல்மதி - கடினசித்தத்தையுடைய, நீசன்-ஒரு புலையன், கடல்நீர்-சமுத்திரதீர்த்தத்தில், மாசிமகத்து - மாசி மாதமக நக்ஷத்திரத்தில், ஆட-மூழ்க, அவன்-அவனுடைய, புன்மை-நீசத்தன்மையை, தவிர்த்து-ஒழித்து, ஆளும்-அடிமைகொண்டருளிய, புலியூர் - திருப்புலியூரானது, தென் மதுரை-தென்திசையிலுள்ள மதுரையில், கல்களிறுக்கு-கல் யானைக்கு, இக்கு-கரும்பினை, அளித்தார்-(தின்னக்)கொடுத் தவரும், கானவன்-வேடராகிய கண்ணப்பநாயனர், எச்சில்-எச்சில்செய்த உணவை, சுவைக்க - சுவை பார்த்தருள, பற்கள்-பற்களை, இறுக்கி-இறுக்கிமென்று, களித்தார்-களிப் படைந்தவருமாகிய நடேசப்பெருமானுடைய,பற்று-இடம்.

மேவுநடுக் கங்கடமை வீட்டியெவர்க் குங்காயாம்
பூவணன்காக் குந்தேன் புலியூரே - கோவணஞ்சீர்த்
தட்டிடவேன் றேப்பினர் தம்பிறவி வல்லிருளே
யட்டிடவேன் றேப்பின ரார்வு.

(இ—ள்) எவர்க்கும்-யாவர்க்கும், மேவு - பொருந்திய, நடுக்கங்கள் தம்மை-அச்சங்களை, வீட்டி-ஒழித்து, காயாம் பூவணன்-காயாம் பூப்போலும கரிய நிறத்தினராய விஷ்ணு மூர்த்தி, காக்கும்-காக்காநின்ற, தென்புலியூர்-அழகிய திருப் புலியூரானது, கோவணம்-கோவணத்தை, சீர் - சிறப்பினையு டைய, தட்டு-துலைத்தட்டில், இடஎன்று - வைக்கக்கடவா யென்றுகூற, ஒப்பினர்தம —(அதற்கு) உடம்பட்டவராகிய அமர்நீதிநாயனரது, பிறவிவல் இருளை-சனனமாகிய வலிய இருளை, அட்டிட - ஒழித்திட, என்று-சூரியனை, ஒப்பினர்-ஒத்தவராகிய நடேசப்பெருமானுடைய, ஆர்வு-விருப்பிடம்.

நேயமனை யாளுடனே நீலகண்ட னார்முதுமை
போயிளமை பெற்ற புலியூரே — தீயமலத்
தோடும்போ தங்கெட்டா ருள்ளத்தா ரன்றிருவர்
தேடும்போ தங்கெட்டார் சேர்வு.

(இ—ள்) நேயம் - அன்பினையுடைய, மனையாளுடன் - மனைவியாரோடு, நீலகண்டனார் - திருநீலகண்ட நாயனார், முதுமைபோய்-கிழப்பருவநீங்கி, இளமைபெற்ற-இளமைப் பருவத்தை அடைந்த, புலியூர் - திருப்புலியூரானது, தீய - கொடிய, மலத்தோடும் - ஆணவமலத்தோடும், போதம் - தற்போதமும, கெட்டார்-நீங்கிய சீவன்முத்தர்களுடைய, உள்ளத்தார்-மனத்தின்கண்ணுள்ளவரும், அன்று - அக்காலத்தில், இருவர்-பிரம விஷ்ணுக்களாகிய இருவரும், தேடும்போது-அன்ன வராக மாகித் தேடும்போது, அங்கு-அவ்விடத்தில், எட்டார்-எட்டாது நின்றவருமாகிய நடேசப்பெருமானுடைய, சேர்வு-இடம். (17)

அந்நாட் சிகைவிளக்கேற் றன்பினுக்கு முத்திகணம்
புன்னயற் கீயும் புலியூரே—யெந்நாளு
மன்பர் கருத்துடையா ரன்பரிடத் தன்பில்லா
வன்பர் கருத்துடையார் வாழ்வு.

(இ—ள்) அந்நாள் - அக்காலத்தில், சிகை - தமது சிகையை, விளக்கு - திருவிளக்காக, ஏற்று - ஏற்றிய, அன்பினுக்கு - பத்திக்கு, முத்தி - மோக்ஷத்தை, கணம்புல் நாயற்கு - கணம்புல்ல நாயனாருக்கு, ஈயும்-கொடுத்தருளிய, புலியூர்-திருப்புலியூரானது,எந்நாளும்-எக்காலமும், அன்பர்-அடியாருடைய, கருத்து-கருத்தினை, உடையார் - (கோயிலாக) உடையவரும், அன்பரிடத்து - அடியாரிடத்தில், அன்பு இல்லா - அன்பு வைக்காத, வன்பர்-பாவிகளுடைய, கரு-சனனத்தை, துடையார்-ஒழிக்காதவருமாகிய நடேசப் பெருமானுடைய, வாழ்வு - வாழுமிடம். (18)

தாவோமத் தானீசந் தான்போய்க் கதிநாளைப்
போவோமென் பார்சேர் புலியூரே – மாவாகச்
சம்புவைச்செய் தேமுனிந்தார் தந்தவத்தி சாயவில்லி
லம்புவைச்செய் தேமுனிந்தா ரார்வு.

(இ–ள்) *தாவு-ஓங்கியெரிகின்ற, ஓமத்தால்-ஓமாக்கினியி ஞல், நீசம்தான்போய்-நீசத்தன்மை நீங்கி, கதி-மோக்ஷத் தை, நாளைப்போவோம் என்பார் - திருநாளைப் போவார், சேர்-சேர்ந்த, புலியூர்-திருப்புலியூரானது, மா ஆக - குதிரை களாக, சம்புவை-நரிகளை, செய்து-ஆக்கி, முன்-முன்னாளில், இந்துஆர் - பிறையை யொத்த, தந்த அத்தி - கொம்புகளை யுடையயானை, சாய - இறக்க, வில்லில்-வில்லிலே, அம்பு-பாணத்தை, வைச்சு-வைத்து, எய்து-எய்து, முனிந்தார்-கோபித்தவருமாகிய நடேசப்பெருமானுடைய, ஆர்வு-விருப் பிடம்.* (19)

சிற்ககனத் தற்சொருபச் சீரகத்தைச் சேந்தனுமுன்
புற்கையிட்டுப் பெற்ற புலியூரே – நற்கொடிக்கோர்
தாயுமா னோர்கோடியார் தங்கள்வினைத் தீங்கோடியார்
பாயுமா னோர்கோடியார் பற்று.

(இ–ள்) *-சித்ககனம் - ஞானகாசமாகிய, தத்சொருபம் சீர் அகத்தை - தாதாத்மிய செல்வத்தை அநுபவிக்கா நின்ற இடமாகிய மோக்ஷத்தை, சேந்தனும் - சேந்தன் என்ப வனும், முன் - முற்காலத்தில், புற்கையிட்டு - புல்லரிசியா லாகிய உணவைத் தந்து, பெற்ற-அடைந்த, புலியூர் - திருப் புலியூரானது, நல்கொடிக்கு - நல்ல பெண்ணினுக்கு, ஓர் தாயும் ஆனோர் - ஒப்பற்ற தாயுமானவரும், கொடியார் தங்கள் - தீயோர்களுடைய, வினைத் தீங்கு - தீவினையை, ஓடியார்-ஒழிக்காதவரும், பாயும் ஆன் ஆர்கொடியார்-பாய் கின்ற இடபமமைந்த கொடியை யுடையருமாகிய நடேசப் பெருமானுடைய, பற்று - இடம்.* (20)

விண்டலமே போற்றும் விராட்புருட ஞரிதய
புண்டரிக மான புலியூரே—சண்டன்வலி
மைத்தாம் பொழிவித்தார் வத்தொடுமார்க் கண்டருக்கன்
பைத்தாம் பொழிவித்தார் பற்று.

(இ-ள்) *விண்தலம் போற்றும் - தேவுலகத்தவரும் பூவுலகத்தவரும் துதிக்கா நின்ற, விராட்புருடனுர் - விராட் புருஷனுருடைய, இதயம் புண்டரிகம் ஆன - இருதயகமல மாகிய, புலியூர் - திருப்புலியூரானது, ஆர்வத்தொடு-அன்பு டன், மார்க்கண்டருக்கு - மார்க்கண்டேய முனிவருக்கு, சண்டன் - இயமனுடைய, வலி - வலிமையையும், மைதாமபு ஒழிவித்து - கரிய பாசத்தையும்நீக்கி, அன்பைத்தாம் பொழி வித்தார் - (தம்பால்) அன்பினைச் செய்தவராகிய நடேசப் பெருமானுடைய, பற்று-இடம்.* (21)

குஞ்சிதத்தாட் கண்டவரைக் கும்பிடப்பெற் ரோர்கள்விரும்
புஞ்சிவவீ டெய்தும் புலியூரே – செஞ்சடையிற்
சின்ன விளம்பிறையார் தில்லைமறை யோருருநா
மென்ன விளம்பிறையா ரில்.

(இ-ள்) *குஞ்சிதத்தாள் - குஞ்சிதபாதத்தை, கண்ட வரை-தரிசித்தவர்களை, கும்பிடப் பெற்ரோர்கள்-வணங்கப் பெற்றவர்கள், விரும்பும்-யாவரும் விரும்பா நின்ற, சிவவீடு- சிவகதியை, எய்தும் - அடையா நிற்கும், புலியூர் - திருப் புலியூரானது, செம்சடையில் - சிவந்தசடையில், சின்ன இளம்பிறையார் - சிறிய இளமையாகிய சந்திரனையுடை யரும், தில்லை மறையோர் - தில்லைவாழந்தணர்களுடைய, உரு - திருவுருவம், நாம் - யாம், என்ன - என்று, விளம்பு- திருவாய் மலர்ந்தருளிய, இறையார் - முழுமுதற் கடவுளு மாகிய நடேசப் பெருமானுடைய, இல் - வீடு.* (22)

தேவமறை யாகமங்க டென்கயிலை யென்றுதொழப்
பூவுலகி லோங்கும் புலியூரே — மூவுலகும்
வந்துதிக்கு முன்புணர்வார் வாழ்வருள வப்பர்தம்பா
தந்துதிக்கு முன்புணர்வார் சார்பு.

(இ-ள்) தேவமறை - தெய்வத்தன்மை பொருந்திய வேதங்களும், ஆகமங்கள் - சிவாகமங்களும், தென்கயிலை யென்று - தென்கயிலாசமென்று, தொழ - வணங்க, பூவுலகில்-பூவுலகத்தில், ஓங்கும்-சிறந்தோங்கா நின்ற, புலியூர் - திருப்புலியூரானது, மூவுலகும் - சுவர்க்க மத்திய பாதாளமாகிய மூன்றுலகங்களும், வந்து உதிக்கும் முன்பு - வந்துற்பத்தியாதற்கு முன்னரே, உணர்வார் - (அவற்றினுக்கக் கேடுகளை) உணர்ந்தவரும், வாழ்வு அருள - பேரின்ப வாழ்வினை அளிக்க, அப்பர்-திருநாவுக்கரசு நாயனர், தம பாதம்-தம்முடைய திருவடிகளை, துதிக்குமுன் - துதித்தற்கு முன்னமே, புணர்வார் - பூசிக்கப்பட்டவருமாகிய நடேசப் பெருமானுடைய, சார்பு-இடம். (23)

நன்மா தவத்தொருவ னூடும் படிக்கிரங்கிப்
பொன்மாரி பெய்யும் புலியூரே — முன்மார்பிற்
பன்னாகத் தந்தார் பகர்தமிழ்க்காச் செங்கறனைப்
பொன்னாகத் தந்தார் புரி.

(இ-ள்) நல் - நல்ல, மாதவத்து ஒருவன் - பெரிய தவத்தினையுடைய ஒருவன், நாடுமபடிக்கு - விரும்பியவிதத்துக்கு, இரங்கி - இரக்கமுற்று, பொன்மாரி - பொன்மழை, பெய்யும் - பெய்த, புலியூர் - திருப்புலியூரானது, முன் மார்பில் - முன்மார்பில், பல்நாகம் தந்தார் - பல பாம்புகளாகிய உபவீதத்தை உடையவரும், பகர்தமிழ்க்கு ஆ - பாடியருளிய தேவாரப் பதிகத்திற்காக, செங்கல் தனை-(சுந்தர மூர்த்தி நாயனருக்குச்) செங்கல்லை, பொன் ஆக தந்தார் -

பொன்னைகச் செய்தவருமாகிய நடேசப் பெருமானுடைய புரி - திருநகர். (24)

நாமகடேன் கீழ்த்திசையி னாட்டுங் குணதிசையிற்
பூமகளர்ச் சிக்கும் புலியூரே - தாமலதோர்
ஆதரவில் லார்வாழ்த் தடியர்தமக் கங்கையிற்பொற்
பூதரவில் லார்வாழ் புரம்.

(இ-ள்) நாமகள்-சரசுவதி, தென்கீழ் திசையில்-தென் கிழக்குத் திசையிலும், பூமகள்-இலக்குமி, நாட்டும் - நன்மையை நாட்டுகின்ற, குணதிசையில்-கிழக்குத் திசையிலும், அர்ச்சிக்கும்-பூசிக்கும், புலியூர்-திருப்புலியூரானது, வாழ்த்து-வழுத்துகின்ற, அடியர்தமக்கு - அடியார்களுக்கு, தாம் அலது-தாமல்லாது, ஓர் ஆதரவு இல்லார்-ஒரு பற்றுக்கோடில்லாதவரும், அம் கையில்-அழகிய திருக்கரத்தில், பொன் பூதரம் - மேருவாகிய, வில்லார-வில்லை யுடையவருமாகிய நடேசப்பெருமான், வாழ்வு-வாழுமிடம். (25)

வாசனைசேர் மாமலரான் மாமறைமூ வாயிரவர்
பூசனைசெய் தேத்தும் புலியூரே - யோசைதரு
பாற்சங் கரியார் பதுமத் திருக்கணிந்தோர்
பாற்சங் கரியார் பதி.

(இ-ள்) வாசனைசேர்-வாசம்பொருந்திய, மா-பெரிய, மலரால்-புட்பங்களைக் கொண்டு, மா - பெருமைபொருந்திய, மறை மூவாயிரவர் - திருவுடையந்தணாளர் மூவாயிரவரும், பூசனைசெய்து-பூசித்து, ஏத்தும்-துதிக்கின்ற, புலியூர் - திருப் புலியூரானது, ஓசைதரு - முழங்குகின்ற, பால் - வெண்மையாகிய, சங்கு-சங்கினையேந்திய, அரி-விஷ்ணுமூர்த்தியினுடைய, ஆர் - அருமையாகிய, பதுமத்திருக்கு - தாமரைக் கண்ணினை, அணிந்தோர் - தரித்தவரும், பால் - (இடது)

பக்கத்தில், சங்கரியார் - உமாதேவியாரையுடையருமாகிய நடேசப் பெருமானுடைய, பதி-திருநகர். (26)

ஓதுபசி யாலெருவை யுண்ணவிறக் குங்கயற்கப்
போதுகதி நல்கும் புலியூரே – பூதிவெகு
வாயிடுமா கத்தனார் வன்கமர்வாய் மாவடுவை
வாயிடுமா கத்தனார் வாழ்வு.

(இ–ள்) ஓதும்-சொல்லும,பசியால்-பசியினால், எருவை உண்ண-பருந்துண்ண, இறக்கும்-உயிர்விடும, கயற்கு-கயன் மீனுக்கு, அப்போது - அப்பொழுதே, கதிநல்கும - முத்தி கொடுத்தருளிய, புலியூர்-திருப்புலியூரானது, பூதி-விபூதியை, வெகுவாய் - அதிகமாய், இடும் - இட்ட, ஆகத்தனார் - திரு மேனியை யுடையவரும், வன்கமர்வாய் - வன்மையாகிய நிலவெடிப்பில், மாவடுவை - மாவின்வடுவை, வாய்இடும- திருவாயிலிட்டருளிய, மாகத்தனார் - பெருமைபொருந்திய கர்த்தருமாகிய நடேசப்பெருமானுடைய, வாழ்வு - வாழு மிடம். (27)

பத்தரைக்கோண் டேபேசாப் பாவைதனைப் பேசுவித்துப்
புத்தரையாட் கோள்ளும் புலியூரே – முத்திதரும்
பஞ்சாக் கரனார் பணிவார் வினையழன்முன்
பஞ்சாக் கரனார் பதி.

(இ–ள்) பத்தரைக்கொண்டு - அடியாராகிய மாணிக்க வாசக சுவாமிகளால், பேசாத பாவைதனை - ஊமைப் பெண்ணை, பேசுவித்து - பேசும்படி செய்வித்து, புத்தரை - பவுத்தரை, ஆட்கொள்ளும் - அடிமைகொண்டருளிய, புலியூர்-திருப்புலியூரானது, முத்திதரும் (செபித்தோர்க்கு) மோக்ஷத்தைத் தருகின்ற, பஞ்சாக்கரனார்—பஞ்சாக்ஷரத்தை யுடையவரும், பணிவார் - வணங்குகின்றவர்களுடைய, வினை-தீவினையை, அழல்முன்-தீயெதிர்ப்பட்ட, பஞ்சு-பஞ்சு

போல், ஆக்கு-செய்கின்ற, அரனுர்-அரனென்னுந் திருநாமத்தையுடையவருமாகிய நடேசப்பெருமானுடைய, பதி-திருநகர். பாவை உவமையாகுபெயர். (28)

கண்ணுறுபோ தேபவத்தைக் காய்ந்தருளு மீரைந்து
புண்ணியதீர்த் தஞ்சேர் புலியூரே — பெண்ணொருபா
கத்திருந்தார் கட்டரியார் கைகூப்பி நின்றுதுதிக்
கத்திருந்தார் கட்டரியார் காப்பு.

(இ-ள்) கண் உறு போதே - தரிசித்த பொழுதே, பவத்தை-பிறப்பினை, காய்ந்து-கடிந்து, அருளும் - கிருபை செய்கின்ற, ஈரைந்து-பத்து, புண்ணியதீர்த்தம - புண்ணிய தீர்த்தங்கள், சேர்-பொருந்திய, புலியூர்-திருப்புலியூரானது, பெண்-உமாதேவியாரின், ஒருபாகத்து-ஒருபக்கத்தில், இருந்தார்-இருக்கப்பெற்றவரும், கட்டு அரியார்-அரைஞாணைக் கட்டிய சர்ப்பத்தையுடையரும், கைகூப்பி- அஞ்சலிசெய்து, துதிக்க-துதிசெய்ய, திருந்தார்கண் - திருத்தமடையாதவரிடத்தில், தரியார்- தங்காதவருமாகிய நடேசப்பெருமானுடைய, காப்பு-காவலிடம.

கட்டரியார் இயல்பாகவே பாசமில்லார் என உரைப்பதும ஒன்று. அருமை-இன்மை, "அருங்கேடர்" என்பதிற் போல.

தில்லையிலுள்ள தசதீர்த்தங்களாவன:- சிவகங்கை, குய்ய தீர்த்தம், புலிமடு, வியாக்கிரபாததீர்த்தம், அனந்த தீர்த்தம், நாகசேரி, பிரமதீர்த்தம, சிவப்பிரியை, திருப்பாற் கடல், பரமானந்த கூபம். (29)

முத்தீ யிடையினவி முந்தச் சொரிந்துமறைப்
புத்தேளோ மஞ்செய் புலியூரே — மெய்த்தோளின்
மாதுளவ னத்தன் வணங்குபத னுகத்தோர்
மாதுளவ னத்தன் மனை.

(இ-ள்.) முத்தீ இடையின் - மூவகையக்கினிகளிலே, அவி-அவிர்ப்பாகத்தை, முந்த-முற்பட, சொரிந்து-பெய்து, மறைப்புத்தேள் - பிரமதேவன், ஓமஞ்செய் - யாகஞ்செய்த, புலியூர்-திருப்புலியூரானது, மெய்தோளின்-தெய்விகமெய்மை யமைந்த புயங்களில், மா- பெருமைதங்கிய, துளவத்தன் - துளவமாலையையுடையவரும், நத்தன் - சங்கினையுடையரு மாகிய விஷ்ணுமூர்த்தி, வணங்கு-வணங்காநின்ற, பதன் - திருவடியையுடையரும, ஆகத்து - திருமேனியில், ஓர் - ஒப் பற்ற, மாது - உமாதேவியாரை, உளவன் - உள்ளவரும, அத்தன்-யாவருக்குந் தந்தையானவருமாகிய நடேசப்பெரு மானுடைய, மனை-வீடு. (30)

ஓர்கலையெங் கெங்கு முலாவியர்த்த யாமத்திற்
பூரணமா யொன்றும் புலியூரே — காரணமாம்
பார்த்தாண் டவனார் பணிந்தாலு முள்ளன்பைப்
பார்த்தாண் டவனார் பதி.

(இ—ள்) ஓர்கலை - ஒருகலையானது, எங்கு எங்கும் - (திருக்கைலாசமுதலிய) எவ்விடங்களிலும, உலாவி - வியா பித்து, அர்த்தயாமத்து - அர்த்தசாமத்திலே, பூரணமாய் - (தொள்ளாயிரத்துத் தொண்ணூற்றென்பது கலைகளோடும்) நிறைவாகி, ஒன்றும் - பொருந்துகின்ற, புலியூர் - திருப்புலி யூரானது, காரணம ஆம்-முத்திபெறுதற்குக் காரணமாகிய, பார் - இடமாயுள்ள தில்லையில், தாண்டவன் - திருநடனத் தையுடையரும, ஆர் - (நால்வகை வருணத்துள்) எவர், பணிந்தாலும் - வணங்கினாலும், உள் அன்பை - அந்தரங்க பத்தியை, பார்த்து-நோக்கி, ஆண்டவன்-ஆள்பவருமாகிய நடேசப்பெருமான், ஆர்-பொருந்திய,பதி-திருநகர். (31)

சோதிவரை மும்மடியாய்த் தோன்று தேவர்க்குமனு
பூதிவேளி யாகும் புலியூரே — மாதேனவங்

கந்தரவல் லானுளுங் கைக்கோளப்போற் றுளமிடுங்
கந்தரவல் லானுளுங் காப்பு.

(இ-ள்) சோதிவரை - பிரகாசம் பொருந்திய மேரு வென்கிற புருவமத்தியம், மும்மடியாய் - இடைகலை பிங்கலை சுழுமுனையென்கின்ற மூன்றுபிரிவாய், தோன்றுது-காணப் படாமல், அனுபூதி - சுரூபானுபூதி, எவர்க்கும்-(சிவயோகி கட்கன்றி) யாவர்க்கும், வெளிஆகும - பிரத்தியட்சப்படு கின்ற, புலியூர் - திருப்புலியூரானது, அங்கம் - என்னை, மாதுளன - பெண்ணுக, தர - படைக்க, வல்லான் - வல்ல வரான திருஞானசம்பந்தமூர்த்திநாயனர், நாளும்-தினமும், கைக்கொள - திருக்கரத்திற்கொள்ள, பொன்தாளம் - பொன்னுலாகிய திருத்தாளத்தை, இடும்-கொடுத்தருளிய, கந்தரம் அல்லான் - காளகண்டத்தையுடையராகிய நடேசப் பெருமான், ஆளும் - ஆளுகின்ற, காப்பு - காவலிடம்.

புருவமத்தியத்தை மேருமலையாகவும், இடைகலை பிங்கலைகளை அக்னி வலமவரும் சந்திராதித்தராகவும், சுழு முனையைச் சந்திராதித்தரோடு யாவுமொடுங்கிய சங்கார காலமாகவும் யோகநூலார் கூறுவர்; சிவானுபூதிமான் களுக்கு இவற்றுல் வரும் அவஸ்தைகளில்லை யாதலின் சோதிவரை மும்மடியாய்த் தோன்றுதென்று கூறினர். (32)

வானமுலக கேத்துதுரு வாசர்பசி யாறவுமை
போனகம ளிக்கும் புலியூரே - யானசந்
நம்பத் துவிதத்தார் நாடரியார் மோனத்தார்
நம்பத் துவிதத்தார் நாடு.

(இ-ள்) வானம் - தேவுலகும், உலகு - பூவுலகும், ஏத்து - துதிக்கின்ற, துருவாசர் - துருவாச முனிவர்க்கு, பசிதணிய, உமை - உமாதேவியார், போனகம் -

அன்னத்தை; அளிக்கும் - பாலித்தருளிய, புலியூர் - திருப் புலியூரானது, ஆன - ஆகிய, சநநம்பத்து விதத்தார் - அவ தாரம் பத்துவகையினையுடைய விஷ்ணுமூர்த்தி, நாடு அரியார்- தேடுதற்கருமையானவரும், மோனத்தார்-ஞானிகள், நயபு- விரும்புகின்ற, அத்துவிதத்தார்-அத்துவிதக் கலப்பினையுடை யருமாகிய நடேசப் பெருமானுடைய, நாடு - இடம். (33)

வாணகையாற் றீபுரத்தின் வாழ்மூ வரைக்காவல்
பூணவளித் தாளும் புலியூரே - யாணவமா
மெய்க்கருத்து வந்தனையான் மிக்குழலா மிக்கோர்கண்
மெய்க்கருத்து வந்தனையான் வீடு.

(இ-ள்) வாள்நகையால்-ஒளிபொருந்திய புன்னகைப் பினால், தீ - தீந்த, புரத்தில் - திரிபுரத்திலிருந்து, வாழ் மூவரை - வாழ்ந்திருந்த மூவரையும், காவல்பூண - காவற் றொழில் கைக்கொள்ள, அளித்து ஆளும் - காத்து அடிமை கொண்டருளிய, புலியூர் - திருப்புலியூரானது, துவந்தனை யால் மிக்கு-(இரண்டிரண்டாய்க் காண்கிற) துவந்தனையால் மிகுந்து, ஆணவம் ஆம் மெய் - (நானென்று மயங்குகின்ற) ஆணவமாகிய உடம்புகளோடும, கரு-பிறவிகளில், உழலா- வருந்தாத, மிக்கோர்கள் - பெரியோர்களுடைய, மெய் - மெய்மையாகிய, கருத்து வந்தனையான் - மனவணக்கத்தை யுடையவராகிய நடேசப் பெருமானுடைய, வீடு - திருக் கோயில். (34)

சம்பந்தர்க் கந்தணர்க டம்மைச் சிவகணமோர்ப்
பும்பண்ணைக் காட்டும் புலியூரே - யம்புலிவா
னேட்டாக மஞ்சார்ந்தா னேத்துமறை யோடிருபா
னேட்டாக மஞ்சார்ந்தா னில்.

(இ-ள்) சம்பந்தர்க்கு - திருஞான சம்பந்த மூர்த்தி நாயனருக்கு; அந்தணர்கள் தம்மை-தில்லைவாழந்தணர்களை,

சிவகணம் - சிவகணத்துக்கு, ஒப்பும் - ஒப்பாகும், பண்பை- தன்மையை, காட்டும - காட்டியருளிய, புலியூர் - திருப்புலியூரானது, அம்புலி - சந்திரனுலாவுகின்ற, வான் - ஆகாயத்தை, எட்டு - அளாவுகின்ற, ஆகம் - தேகம், மஞ்சு - மேகத்தை, ஆர்ந்தான்-ஒத்தவராகிய விஷ்ணுமூர்த்தி, ஏத்த- துதிக்க, மறையோடு - வேதங்களையும், இருபான் எட்டு - இருபத்தெட்டு, ஆகமம சார்ந்தான் - சிவாகமங்களையுஞ் சார்ந்தவராகிய நடேசப் பெருமானுடைய, இல்-வீடு. (35)

வைத்தவரு ளாற்கோவை வாதவூ ரன்புகலப்
புத்தகத்திற் றீட்டும் புலியூரே — துத்தியரா
வானத் தமரிந்தார் மாமவுலி யாரேழுநா
வானத் தமரிந்தார் வாழ்வு.

(இ—ள்) வைத்த அருளால் - பதித்த திருவருளினால், கோவை-திருக்கோவையாரை, வாதவூரன் - மாணிக்கவாசக சுவாமிகள், புகல - திருவாய்மலர்ந்தருள, புத்தகத்தில் - ஏட்டில், தீட்டும-வரைந்தருளிய, புலியூர்-திருப்புலியூரானது, துத்தி - படப்பொறியையுடைய, அரா - பாம்பு, வானத்து அமர் இந்து - ஆகாயத்திற் பொருந்திய சந்திரனும், ஆர்- ஆத்திமலையையுப தரித்த, மாமவுலியார் - பெருமைவாய்ந்த சடையையுடையரும, எழுநாவான்-அக்கினிதேவனுடைய, அத்தம் - கரங்களை, அரிந்தார் - அரிந்தவராகிய நடேசப் பெருமானுடைய, வாழ்வு - இருப்பிடம். (36)

சீருற் றசரீரி சேக்கிழார்க் காதிமொழி
பூரித் துரைக்கும் புலியூரே — நீரைக்
கரந்துவைத்த வேணியார் காதினிற்று விக்கூய்க்
கரந்துவைத்த வேணியார் காப்பு.

(இ—ள்) சீர் உற்ற - சிறப்புப்பொருந்திய, அசரீரி-அசரீரியானது, ஆதி மொழி - (உலகெலா மென்னும்) முதல்

மொழியை, சேக்கிழார்க்கு - சேக்கிழார் சுவாமிகளுக்கு, பூரித்து - மகிழ்ந்து, உரைக்கும் - சொல்லியருளிய, புலியூர்- திருப்புலியூரானது, நீரை - கங்கையை, கரந்து - (பனித்துளி போல்) ஒளித்து, வைத்த - வைத்த, வேணியார் - சடையை யுடையவரும், காதினில்-திருச்செவியில், தாவிகூய் - கூவித் தாவி, கரம் - திருக்கரத்தில், துவைத்த - ஒலிக்கின்ற, ஏணி யார் - மானையுடையருமாகிய நடேசப் பெருமானுடைய, காப்பு - காவலிடம். (37)

வாட்கையச வாணிபன்சோன் மாநூ லினைப்படிக்கற்
பூட்கையெடுக் கக்கோள் புலியூரே — தாட்கமலப்
போதுளவ னத்தன் புருகூதன் போற்றுமந்திப்
போதுளவ னத்தன் புரி.

(இ—ள்) வாள்கை - வாளைக்கையிலேயுடைய, அசம் வாணிபன் - ஆட்டுவணிகராகிய உய்யவந்ததேவர், சொல் - கூறிய, மா நூலினை - பெருமைதங்கிய சைவசித்தாந்த சாஸ்தி ரத்தை, படி - படியிலுள்ள, கல்பூட்கை-கல்யானையானது, எடுக்க - எடுத்துத்தர, கொள் - அங்கீகரித்தருளிய, புலியூர்- திருப்புலியூரானது, தாள் - தாளையுடைய, கமலம்போது உளவன் - தாமரைப்பூவிலுள்ளவரும், அத்தன் - அவர் பிதாவாகிய விஷ்ணு மூர்த்தியும், புருகூதன் - இந்திரனும், போற்று - துதிக்கின்ற, அந்திப்போது - மாலைக்காலத்தில், உள் - தியானிக்கப்படுகின்ற, அ அனத்தன் - அந்த உருத் திரையாகிய சத்தியையுடைய நடேசப் பெருமானுடைய, புரி - திருநகர்.

சிதம்பரத்திலெழுந்தருளியிருந்த திருக்கடவூர் உய்ய வந்த தேவநாயனார் தமது ஞானாசிரியராய உய்யவந்த தேவ நாயனார் அருளிச்செய்த சைவசித்தாந்த நூல்கள் பதினன் கனுள் திருவுந்தியாரின் உட்கிடையை விளங்கக்காட்ட இக்

நூல் செய்தருளி நடராசப்பெருமான் சந்நிதியில் வாசிக்க முயலும்போது தில்லைவாழந்தணர் சந்நிதானத்தின் படியி லுள்ள கல்யானை இந்நூலைப்படியின்மேல் வைத்தால் வாசிக் கலாமென்று கூற அதற்குடன்பட்டு அக்கல்யானைமேல் வைத்தனர். அக்கல்யானை யெடுத்துப் படியின்மேல் வைத்த லால் அந்நூலுக்குத் திருக்களிற்றுப் படியாரெனக் காரணப் பெயர் வந்தது. (38)

ஆசையெட்டி னுக்கிறையு மாசையெட்டி யாசைவிடப்
பூசையிட்டுப் போற்றும் புலியூரே – பேசவேட்டா
வேதாந்த ரும்பரமர் விண்ணு டளந்தநெல்லை
வேதாந்த ரும்பரமர் வீடு.

(இ–ள்) ஆசை எட்டினுக்கு இறையும்-திக்குப்பாலகர் எண்மரும், ஆசைஎட்டி-அன்புமிகுந்து, ஆசைவிட-நிராசை யுண்டாக, பூசைஇட்டு - பூசித்து, போற்றும் - துதிக்கும், புலியூர் - திருப்புலியூரானது, பேசஎட்டா - எடுத்துப்பேசு தற்கு முடியாத, வேதாந்தர் - வேதாந்தப் பொருளான வரும், உம்பர்அமர் - தேவர்கள் வசிக்கும், விண்நாடு - தேவுலகத்தை, அளந்த - அளாவிய, நெல்லை - திருநெல் வேலியில், வே-மூங்கில், தரும் - தந்த, பரமர்-பரமருமாகிய நடேசப்பெருமானுடைய, வீடு - திருக்கோயில். தாம் - அசை (39)

சூரியனும் பச்சைத் துழாய்முகிலும் பூசனைதேன்
பூருவதிக் கிற்செய் புலியூரே – கூரியவேல்
ஆறு முடிக்குமர னுபதே சம்பெறுவான்
ஆறு முடிக்குமர னார்வு.

(இ–ள்) சூரியனும் - சூரியனும், பச்சைத் துழாய் முகிலும்-பசுமையாகிய துளவ மாலையை அணிந்த மேகம் போலும் நிறத்தினையுடைய விஷ்ணு மூர்த்தியும், பூசனை - பூசையை, தென் பூருவம் திக்கில் - தென் கீழ்த்திசையில்,

செய்-செய்த, புலியூர்-திருப்புலியூரானது, கூரியவேல்-கூர்மைபொருந்திய வேலாயுதத்தையுடைய, ஆறுமுடிகுமரனல்-ஆறு திருமுடிகளையுடைய முருகக் கடவுளினால், உபதேசம-பிரணவோபதேசத்தை, பெறுவான் - பெற்றவரும், ஆறு - கங்கையை, முடிக்கும்-(சடையில்) தரித்தருளிய, அரன்-அரனென்னுந் திருநாமத்தையுடையருமாகிய நடேசப்பெருமானுடைய, ஆர்வு-இருப்பிடம். (40)

மேனிலத்தோப் பாலயங்கண் மெய்க்கவுடர் கோன்செழுஞ்
பூனதத்தாற் செய்யும் புலியூரே — ஞானமுற்ற [சாம்
சம்பந்த ரத்தர் தராதலமே லாம்புணருஞ்
சம்பந்த ரத்தர் தலம்.

(இ—ள்) மேல் நிலத்து ஒப்ப-பொன்னுலகுக்கு நிகராக, ஆலயங்கள் - ஆலயங்களை, மெய்-உண்மையுடைய, கவுடர் கோன்-கவுடதேசாதிபதியாகிய இரணியவருமர், செழும்-செழுமையாகிய, சாம்பூனதத்தால் - சாம்பூனதமென்னும் பொன்னினல், செய்யும் - செய்தமைத்த, புலியூர்-திருப்புலியூரானது, ஞானம் உற்ற சம்பந்தர் அத்தர்-திருஞானசம்பந்தமூர்த்தி நாயனருக்குப் பிதாவானவரும், தராதலம் எலாம் - உலகமெல்லாம், புணர்-கலந்த, சம்பு-சம்புவெனுந் திருநாமத்தையுடையவரும், அம் தரத்தர்-கங்கையைத்தரித்த சிரசையுடையவருமாகிய நடேசப்பெருமானுடைய, தலம்-திருநகர். (41)

உக்கிரசா முண்டியும்பண் டூர்த்தநடத் தானணம்
புக்குவந்தித் தேத்தும் புலியூரே — யக்கு
வலையங் கழுத்துளவன் வாரியின் மீனுக்கா
வலையங் கழுத்துளவன் வாழ்வு.

(இ—ள்) உக்கிரம்-உக்கிரத்தையுடைய, சாமுண்டியும்-காளியும், பண்டு-முற்காலத்தில், ஊர்த்தநடத்தால்-ஊர்த்த

திருநடனத்தினால், நாணம்புக்கு-நாணங்கொண்டு, வந்தித்து-வந்தனை செய்து, ஏத்தும் - துதிக்கும், புலியூர்-திருப்புலியூரானது, அக்குவலயம் - என்புமாலையை, கழுத்து-திருமிடற்றில், உளவன்-உள்ளவருட, வாரியின் மீனுக்கு ஆக-சமுத்திரத்திலுள்ள மீனின் பொருட்டு, வலை-வலையை, அங்கு-அந்த இடத்தில், அழுத்து-அழுத்திய, உளவன் - உளவில் வல்லவருமாகிய நடேசப்பெருமானுடைய, வாழ்வு-இருப்பிடம். (42)

மாதவத்து மாணிக்க வாசகர்மன் றுள்ளொளிக்குட்
பூதியத்தோ டொன்றும் புலியூரே — கேதகைப்பூந்
தாமங் கழித்தளிப்பார் தன்னொடண்ட மூழிதோறுந்
தாமங் கழித்தளிப்பார் சார்பு.

(இ—ள்) மாதவத்து-பெரியதவத்தினையுடைய, மாணிக்க வாசகர்-மாணிக்கவாசக சுவாமிகள், மன்றுள்-கனகசபையினுள்ளேயுள்ள, ஒளிக்குள் - சோதியுள், பூதியத்தோடு-பூததேகத்துடன், ஒன்றும - இருமையறக்கலந்த, புலியூர் - திருப்புலியூரானது, கேதகைபூ தாமம-தாழையினது பொலிவாகிய பூவை, கழித்து - நீத்து, அள் இ பார்தன்னொடு - நெருங்கிய இந்தப்பூமியையும், அண்டம்-அண்டங்களையும், ஊழிதொறும்-ஊழிக்காலந்தோறும், அங்கு-அவ்விடத்தில், அழித்து-சங்கரித்து, அளிப்பார்-மீட்டும் சிருஷ்டிப்பவராகிய நடேசப்பெருமானுடைய, சார்பு-இடம். தாம்-சரியை.(43)

நாட்டமுறு மாசிமக நாள்வணிகன் பாசவினைப்
பூட்டறுத்தா னுந்தேன் புலியூரே — மாட்டில்
எழுதுங் கரப்பரனு ரேடதனிற் கோவை
எழுதுங் கரப்பரனு ரில்.

(இ—ள்) நாட்டம் உறு-யாவரும் விரும்பத்தக்க, மாசி மகம் நாள்-மாசி மாதம் மக நக்ஷத்திரத்தில், வணிகன்-தூர்க்

கடன் என்னும் வணிகனது, பாசம்-அவாவின் காரியமாகிய, வினை-நல்வினை தீவினை யென்கின்ற, பூட்டு-திறத்தற்கரிய பூட்டினை, அறுத்து-நீக்கி, ஆளும்-அடிமை கொண்டருளிய, புலியூர்-திருப்புலியூரானது, மாட்டில்-இடபத்தில், ஏழ-ஏறு கின்ற, துங்கர்-பரிசுத்தரும், அப்பர் அ(ன்)னார்-யாவர்க்கும தந்தையாரை யொத்தவரும், ஏடு அதனில் - புத்தகத்தில், கோவை - திருக்கோவையாரை, எழுதும - எழுதின, கரம பரனார் - திருக்கரத்தையுடைய மேலான கடவுளுமாகிய நடேசப்பெருமானுடைய, இல்-வீடு. (44)

சேப்புநடத் தைத்தே சிகநமசி வாயர்களிப்
புப்பெறக்காட் டுந்தென் புலியூரே — யொப்பதிலா
வோரேற்றி னைமறையா னுள்ளத் திரங்குமடி
யோரேற்றி னன்மறையா னூர்.

(இ—ள்) செப்பும் - யாவரும் சிறப்பித்துச் சொல்லு கின்ற, நடத்தை-திருநடனத்தை, தேசிகநமசிவாயர்-குருநம சிவாயர், களிப்புப்பெற - மகிழ்வுற, காட்டும்-தரிசிப்பித்தரு ளிய, தென்-அழகிய, புலியூர்-திருப்புலியூரானது, ஒப்பு அது இலா-நிகரில்லாத, ஓர் ஏற்றினன்-ஒரு இடபத்தை உடை யவரும், மறையான்-வேதங்களை அருளினவரும், உள்ளத்து-மனத்தில், இரங்கும்-இரங்காநின்ற, அடியோர்-அடியார் கள், ஏற்றினல்-துதித்தால், மறையான் - மறைந்திராதவரு மாகிய நடேசப்பெருமானுடைய, ஊர்-திருநகர்.

குருநமசிவாயர் நடேசப்பெருமானுடைய ஆணையினல் சிலம்புங் கிண்கிணியும செய்விக்கச் சிற்பிகளிடத்தில் வேண்டும் பொருள் தந்தனர். அது தெரிந்த தில்லைவாழந் தணர்கள் அவற்றைத் தரித்தால் நம்பிரானர் திருநடனஞ் செய்யப்போகிருரா? என்ற சொல்லைக்கேட்டு, அவை வந்த பின் சாத்தித் தில்லைவாழந்தணர்களை வருவித்து "அம்பல

வாவோர்கா லாடினுற் ருழ்வாமோ, உம்பரெலாங் கொண்டதனைக் கொப்பாமோ – சம்புவே, வெற்றிப் பதஞ்சலிக்கும் வெம்புலிக்குந் தித்தியெனா, ஒத்துப்பதஞ்சலிக்குமோ" எனக் கூற நடனஞ் செய்தருளினர் என்பது புராணவரலாறு. (45)

நந்திமுதற் றேவர்பல ஞானமுனி வோர்பூசை
புந்திமகிழ்ந் தேத்தும் புலியூரே – தந்தனையைக்
காமருகே சஞ்சரிப்பா ரன்பினுக்கு முத்தியிட்டோ
ராமருகே சஞ்சரிப்பா ரார்வு.

(இ–ள்) நந்தி முதல் தேவர்-நந்தி தேவர் முதலாகிய தேவர்களும், பல ஞான முனிவோர் - ஞானத்தையுடைய பல முனிவர்களும், புந்தி மகிழ்ந்து-மன மகிழ்ந்து, பூசை-பூசனையை, ஏத்தும்-செய்து துதிக்கும், புலியூர்-திருப்புலியூரானது, தம் தனையைக்கு-தம்முடைய புத்திரியார்க்கு, ஆம்-ஆகிய, மரு-வாசனைபொருந்திய, கேசம்-கூந்தலை, சரிப்பார்-அரிந்தவராகிய மானக்கஞ்சாற நாயனாருடைய, அன்பினுக்கு-அன்புக்கு, முத்தி இட்டு-கதியை யளித்து, ஆராமகிமை யறியாத, மருகு-மருகனாகிய மன்மதனுடைய, ஏசு-குற்றமுற்ற, அஞ்சு - பஞ்சபாணங்களையும், அரிப்பார் வென்றவராகிய நடேசப் பெருமானுடைய, ஆர்வு-விருப்பிடம். அரிப்பார் என்பதைக் கால மயக்காகக் கொள்வதன்றி அரிப்பென்னும் தொழிற்பெயர்ப்பகுதி கொண்டு குறிப்புவினைப் பெயராக முடிப்பினும் பொருந்தும். (46)

வன்பர்புலை யோரேனினும் வாசஞ் செயிலவர்தம்
புன்பிறவி மாற்றும் புலியூரே – யன்புதிகழ்
வத்திரங்க ளாந்தார் வனத்திருடி மாதரிடை
வத்திரங்க ளாந்தார் மனை.

(இ–ள்) வன்பர் புலையோர் எனினும்-துட்டர்களானாலும் நீசர்களானாலும், வாசஞ் செயில்-வசித்தால், அவர்

தம் - அவர்களுடைய, புன்பிறவி-புன்மையாகிய பிறப்பினை, மாற்றும்-நீக்காநின்ற, புலியூர்-திருப்புலியூரானது, அன்பு-அன்பானது, திகழ்-விளங்குகின்ற, வத்திரங்கள் ஐந்தார்-ஐந்து திருமுகங்களை யுடையவரும், வனத்து-தாருகாவனத்திலுள்ள, இருடிமாதர் - இருடி பதினிமார்களுடைய, இடை-இடையிற்கட்டிய, வத்திரம்-வஸ்திரங்களை, களைந்தார்-களைந்தவருமாகிய நடேசப்பெருமானுடைய, மனை-வீடு.

ஐந்து திருமுகங்களாவன:- ஈசானம, தற்புருடம், அகோரம், வாமம, சத்தியோசாதம். (47)

சாதல்பிறப் பைப்புலைப்பேற் றானுக் குமாபதியாற்
போதல்செய் வித்த புலியூரே - சோதிப்
பரசங் கரனார் பனிமதிசூ டுந்தற்
பரசங் கரனார் பதி.

(இ-ள்) சாதல் பிறப்பை-மரணத்தையும் சனனத்தையும், புலை பெற்றானுக்கு-புலையர் குலத்திற்றோன்றிய பெற்றான் சாம்பானுக்கு, உமாபதியால்-உமாபதி சிவாசாரியரைக்கொண்டு, போதல் செய்வித்த - ஒழிப்பித்தருளிய, புலியூர் - திருப்புலியூரானது, சோதி-பிரகாசத்தையுடைய, பரசு-மழுவைத்தரித்த, அம் கரனார் - அழகிய திருக்கரத்தை உடையவரும், பனி-குளிர்ச்சியாகிய, மதி-சந்திரனை, சூடும்-தரித்த, தற்பர சங்கரனார்-தற்பரராயுள்ள சுகம்புரி முதல்வருமாகிய, நடேசப்பெருமானுடைய, பதி-திருநகர். (48)

நாட்டிலிறந் தோரான்மா நல்லெலன்பவ் வெல்லைதனிற்
போட்டிடவீ டெய்தும் புலியூ ரே - கோட்டிபமூர்
வாசவன சத்தினன் வாழ்த்தித் தொழுஞ்சரண
வாசவன சத்தினன் வாழ்வு.

(இ-ள்) நாட்டில் - புறநாட்டில், இறந்தோர் - இறந்தவரது, நல்-நல்ல, என்பு-எலும்பை, அவ் எல்லைதனில்-அந்தத்

திருவெல்லையில், போட்டிட - போட்டு வைக்க, ஜன்மா - அவர்களது ஆன்மா, வீடு - மோக்ஷத்தை, எய்தும் - அடைகின்ற, புலியூர் - திருப்புலியூரானது, கோடு இபம் ஊர் - நான்கு கொம்புகளையுடைய வெள்ளை யானையை நடத்துகின்ற, வாசவன் - தேவேந்திரனும், அசத்திரன் - ஆட்டுக்கடா வாகனனாகிய அக்கினிதேவனும், வாழ்த்தித் தொழ - துதித்து வணங்கும், சரணம் - திருவடியாகிய, வாசம் - வாசனை பொருந்திய, வனசத்தினன் - தாமரை மலரையுடையாராகிய நடேசப்பெருமான், வாழ்வு - வாழுமிடம். (49)

ஏழுலகேத் தொன்பா னிலிங்கப் பிரதிட்டை
பூழியர்கோன் செய்த புலியூரே - வாழ்சிவலோ
கத்தர்கணிச் சிப்படையார் காதலித்துன் னாதநெஞ்ச
கத்தர்கணிச் சிப்படையார் காப்பு.

(இ-ள்) ஏழு உலகு - ஏழுலகங்களும், ஏத்து - துதிக்கும், ஒன்பான் இலிங்கம் பிரதிட்டை - ஒன்பது இலிங்கப்பிரதிஷ்டையை, பூழியர்கோன் - பாண்டியரில் ஒருவன், செய்த - பண்ணின, புலியூர் - திருப்புலியூரானது, வாழ் - (சஞ்சலமற்று) வாழத்தக்க, சிவலோகத்தர் - சிவலோகத்தையுடையவரும், கணிச்சிப்படையார் - மழுவாயுதத்தையுடையவரும், காதலித்து - விருப்பமுற்று, உன்னாத - தியானிக்காத, நெஞ்சகத்தர்கண் - மனத்தை யுடையவர்களிடத்தில், இச்சிப்பு அடையார் - விருப்பமில்லாதவருமாகிய நடேசப் பெருமானுடைய, காப்பு - காவலிடம். (50)

ஆனபல சத்திரத்து மாழ்கமல வாவியினும்
போனகம்பா லிக்கும் புலியூரே - யானெனுந்தற்
போதமொழி வாயினார் புந்திச் சுடரொளியார்
வேதமொழி வாயினார் வீடு.

(இ-ள்) ஆன - ஆகிய, பல சத்திரத்தும் - பல சத்திரங்களிலும், போனகம் - அன்னத்தை, பாலிக்கும்-கொடுத்தலும், ஆழ் - ஆழ்ந்த, கமலம் வாவியினும் - தாமரை மலர்களையுடைய தடாகங்களிலும்,போன கமபு ஆலிக்கும்-சென்ற சங்குகள் ஒலித்தலும பொருந்திய, புலியூர் - திருப்புலியூரானது, யான் எனும் - யான் என்கின்ற, தற்போதம்-சீவபோதம, ஒழிவு ஆயினர் - நீங்கிய சிவயோகிகளுடைய, புந்தி - மனத்தில், சுடர் - பிரகாசிக்கின்ற, ஒளியார்-சோதிமயமானவரும, வேதம்மொழிவாயினர் - நான்கு வேதங்களையும் சொல்லியருளிய திருவாயினையுடையவருமாகிய நடேசப்பெருமானுடைய, வீடு - திருக்கோயில். (51)

ஓதிமமும் வேந்த ருலவுநெடு வீதிகளும்
போதகமே நிற்கும் புலியூரே – மாதவர்க்கு
வீடளித்தார் மாட்டினர் வேணிபுய மீதிதழி
யேடளித்தார் மாட்டினு ரில்.

(இ-ள்) ஓதிமம் - அன்னங்கள், போது அகமே - தாமரை மலரிலே, நிற்கும்-நிற்றலையும, வேந்தர்-அரசர்கள், உலவு - உலாவுகின்ற, நெடு-நெடிய, வீதிகள்-வீதிகளிலே, போதகமே - யானைகளே, நிற்கும-நிற்றலையும பொருந்திய, புலியூர் - திருப்புலியூரானது, மாதவர்க்கு-பெருமைவாய்நத தவத்தினை யுடையார்கட்கு வீடு அளித்தார் - சதியைக் கொடுத்தருளினவரும, மாட்டினர் - இடப வாகனத்தை யுடையவரும், வேணி (மீது)-சடையின் மேலும், புயம மீது-தோளின் மேலும், இதழி ஏடு அளித்தார்-கொன்றை மலராற்றொடுக்கப்பட்ட வண்டுகள் பொருந்திய மாலையை, மாட்டினர் - அணிந்தவருமாகிய நடேசப்பெருமானுடைய, இல் - வீடு. வேணி புயம் உம்மைத்தொகை. (52)

மாத்தயங்கு சோலைகளும் வந்தவப்பர் தாமுமகிழ்
பூத்தழைக்கப் பாடும் புலியூரே – வாய்த்தபுலி

யோடப் பதஞ்சலியா ருண்மகிழ மன்றினட
மாடப் பதஞ்சலியா ரார்வு.

(இ-ள்) தயங்கு - விளங்குகின்ற, சோலைகள்-சோலைகளில், மகிழ் - மகிழமரத்தினது, பூ - புட்பங்களையும், தழை-தழைகளையுமுடைய, கப்பு - கவடுகளிலே, மா - வண்டுகள், ஆடும் - அலைந்து திரிதலையும, வந்த அப்பர்தாமும் - தரிசிக்க வந்த திருநாவுக்கரசு சுவாமிகளும, மகிழ்பூத்து அழைக்கப் பாடும-களி கூர்ந்தழைத்தருளப் பதிகம்பாடுதலையும பொருந்திய, புலியூர்-திருப்புலியூரானது, வாய்த்த-கிடைத்த, புலியோடு - வியாக்கிரபாத முனிவரோடு, அ பதஞ்சலியார்-அந்தப்பதஞ்சலிமுனிவர், உள்மகிழ - மனங்களிக்க, மன்றில்-கனக சபையில், நடம் ஆட - திருநடனம் புரிதற்கு, பதம் சலியார் - திருவடி துயக்கமற்றவராகிய நடேசப்பெருமானுடைய, ஆர்வு - விருப்பிடம். (53)

கட்பங் கயமின்னார் கார்க்குழலி லந்தியினிற்
புட்பஞ் சரஞ்சேர் புலியூரே - நட்பினொடு
மெச்சிக்கும் பிட்டார் மெலிவொழிப்பார் வந்தியிட
விச்சிக்கும் பிட்டா ரிடம்.

(இ-ள்) கண் பங்கயம மின்னார்-கண்களாகிய தாமரை மலர்களையுடைய பெண்களது, கார்க்குழலில் - மேகத்தையொத்த கூந்தலில், புட்பம் - புட்பங்களும், சரம - மாலைகளும, சேர் - சேர்தலும், அந்தியினில் - அந்திப்பொழுதில், புள் - பக்ஷிகள், பஞ்சரம் - கூடுகளில், சேர் - அடைதலும் பொருந்திய, புலியூர் - திருப்புலியூரானது, நட்பினொடு - சிவநேசத்தோடு, மெச்சி - புகழ்ந்து, கும்பிட்டார் - அஞ்சலி செய்த அடியார்களுடைய, மெலிவு-துன்பத்தை, ஒழிப்பார்-நீக்குபவரும், வந்தி - வந்தியென்பவள், இட - கொடுக்க,

இசைக்கும - விரும்பி யுண்ட, பிட்டார் - பிட்டினை யுடைய வருமாகிய நடேசப் பெருமானுடைய, இடம்-இருப்பு. (54)

சாரொலிநீ டாவணமுங் தம்பதியை மாதருங்கற்
பூரமணந் துன்னும் புலியூரே – பாரினுட
னூதையங்கி யம்புவா னுட்புறம்பான ருசிபக்கற்
றூதையங்கி யம்புவான் றேய்வு.

(இ-ள்) சார் - பொருந்துகின்ற, ஒலி - முழக்கத்தை யுடைய, நீடு - நீண்ட, ஆவணமும்-கடைவீதியும், கற்பூரம் மணம - கற்பூரவாசனை, துன்னும் - பொருந்துதலையும, தம்பதியை - தமது கணவரை, மாதரும் - பெண்களும, கற்பு ஊர - கற்புமிக, மணந்து-கலந்து, உன்னும் - (தெய்வமாகக்) கருதுதலையும பொருந்திய, புலியூர்-திருப்புலியூரானது, பாரினுடன் - பிரிதிவியோடு, ஊதை-வாயுவும, அங்கி - தேயுவும், அம்பு - அப்புவும், வான் - ஆகாயமுமாகிய பஞ்சபூதங்களினது, உள் புறம்பான்-உள்ளும புறமபுமானவரும், தாசி பக்கல் - (தாயும சிதேவியும போல் விளங்கும்) பரவையாரிடத்தில், தூதை - தூதினை, அங்கு - அவ்விடத்தில், இயம்புவான் - சொன்னவருமாகிய நடேசப் பெருமானுடைய, தேய்வு - வியாபக இடம. (55)

மீத்தா விமகரனை மீன்பாய்ந் தரம்பையினைப்
பூத்தா றுடைக்கும் புலியூரே – கூத்தாடிப்
பாதஞ் சிவந்தார் பழிக்கால வாயினிலோர்
போதஞ் சிவந்தார் புரி.

(இ-ள்) மீ - மேலே, தா - தவழ்கின்ற, இமகரனை - சந்திரனை, பூத்த ஆல் துடைக்கும - தோன்றிய ஆலமரந் துடைத்தலையும், மீன்-மீன்கள், பாய்ந்து-பாய்ந்து, அரமபையினை-வாழையினது, பூத்தாறு - பூவோடு கூடிய குலைகளை,

உடைக்கும் - உடைத்தலையும் பொருந்திய, புலியூர் - திருப் புலியூரானது, கூத்தாடி-திருநடம்புரிந்து, பாதம்-திருவடி, சிவந்தார்-சிவந்தவரும், பழிக்கு-பழிக்காக, ஆலவாயினில்-மதுரையில், ஓர்போது-ஓர்காலத்தில், அஞ்சிவந்தார்-அஞ்சி வந்தவருமாகிய நடேசப்பெருமானுடைய, புரி-திருநகர். (56)

அற்பகற்சோட் டன்றிலன்பா லாந்தவத்தா லும்பருக்கும்
புற்பதிமே லாகும் புலியூரே — வெற்பினுரு
வந்தக் கழலொளியார் மன்றுளேவ ருக்குமர
விந்தக் கழலொளியார் வீடு.

(இ—ள்) அல்பகல் - இரவு பகலும், சோடு அன்றில்-ஆணும் பெண்ணுமாகிய அன்றில்கள், உம்பர் உக்கும் - விண்ணுலகத்தைச் சிதைக்காநின்ற, புற்பதிமேல் - பனை மரத்தின்மீது, ஆகும் - இருத்தலையும், ஆம்தவத்தால் - கைகூடியதவத்தினால், உம்பருக்கும் - தேவவுலகத்திற்கும், புற்பதி - புலீச்சரம, மேலாகும் - மேலாதலையும் பொருந்திய, புலியூர் - திருப்புலியூரானது, வெற்பின் உருவம் - மலையுருவமாக, தக்க - தகுதிபெற்ற, அழல் ஒளியார் - அக்கினியொளியையுடையவரும், மன்றுள் - பொன்னம்பலத்தில், எவருக்கும - யாவருக்கும், அரவிந்தம் கழல் - தாமரைமலர் போன்ற திருவடியை, ஒளியார் - மறைக்காதவருமாகிய நடேசப் பெருமானுடைய, வீடு - திருக்கோயில். (57)

மாவனஞ்சூழ் காவிடத்து மாலுறுமின் ஞரிடத்தும்
பூவைவண்டு துந்தேன் புலியூரே — நாவளைந்து
பிட்டிரத மென்றூர் பிரமப்பா காகோணர்வாய்
தட்டிரத மென்றூர் தலம்.

(இ—ள்) மா - மாமரங்கள், வனம் - கூட்டமாக, சூழ்-சூழ்ந்த, காவிடத்தும்-சோலைகளில், பூவை-பூக்களை, வண்டு-வண்டுகள், ஊதும்-ஊதுதலையும், மால்உறுமின்ஞரிடத்தும்-

மயக்கமுற்ற பெண்களிடத்தில், பூவை - நாகணவாய்ப் பறவையை, வண் - வண்மையாகிய, தூது உந்துளன்-தூதாய்ப் போ என்னுதலையும் பொருந்திய, புலியூர்-திருப்புலியூரானது, இரதம் - சுவையை, நா அளைந்து - நாவினாலளைந்து, பிட்டு-பிட்டினை, மென்றார்-மென்று தின்றவரும், பிரமன்பாகா - பிரமனாகியபாகனே, தட்டு - தட்டுக்களையுடைய, இரதம - இரதத்தை, கொணர்வாய் - கொண்டுவா, என்றார்-என்று சொன்னவருமாகிய நடேசப் பெருமானுடைய, தலம்-திருநகர் (58)

பண்டுதவஞ் செய்திடவும் பள்ளரலத் தாலுழவும்
புண்டரிக மல்கும் புலியூரே – விண்டுமறை
வேந்துமறி யாரிருக்கு மேயறியார் தீயகலோ
டேந்துமறி யாரிருக்கு மில்.

(இ–ள்) பண்டு - முன்னாளில், தவஞ்செய்திட - தவஞ் செய்ய, புண்டரிகம்-வியாக்கிரபாதமுநிவர், அல்கும - தங்குதலையும், பள்ளர்-பள்ளர்கள், அலத்தால்-கலப்பையினால், உழ-உழும்படி, புண்டரிகம் - தாமரைகள், மல்கும - நிறைதலையும் பொருந்திய, புலியூர் - திருப்புலியூரானது, விண்டும-விஷ்ணுமூர்த்தியும், மறைவேந்தும-பிரமதேவனுமாகிய இருவர்களால், அறியார் - அறியப்படாதவரும், இருக்குமே அறியார் - வேதங்களாலும் அறியப்படாதவரும், தீ அகலோடு- அக்கினியகலொடு, ஏந்துமறியார்-ஏந்தியமானையுடையருமாகிய நடேசப்பெருமான், இருக்கும-எழுந்தருளியிருக்கின்ற, இல்-திருக்கோயில். ‘ஓடு’ என்பதற்குக் கபாலமெனவும், ‘மறியார்’ என்பதற்கு மறியாதவர் (இறப்பிலி) எனவும் பொருளுரைத்து முடிப்பினும் பொருந்தும். (59)

சாற்றுதிருத் தொண்டருஞ்செய்ச் சங்கினமு முந்துமதி
போற்றவள மிக்க புலியூரே - யேற்றுநுவாய்ச்

சங்கத் தரங்கத்தர் தாங்கமகிழ் வோருமையோர்
பங்கத் தரங்கத்தர் பற்று.

(இ-ள்) சாற்று - சொல்லப்படுகிற, திருத்தொண்டர்-மெய்யடியார்கள், உந்து மதி - பேரறிவோடு, போற்ற - துதிக்க, வளம - அருட்செல்வம, மிக்க - மிகுதலும், செய்-வயல்களில், சங்கு இனம்-சங்குக் கூட்டங்கள், முந்து மதி போல் - வளர்ந்த பூரண சந்திரனைப்போல, தவளம்-வெண்ணிறம், மிக்க-மிகுதலும் பொருந்திய, புலியூர் - திருப்புலியூரானது, ஏறு உருவாய்-இடப வடிவாகி, சங்கத்து-சங்கினையுடைய, அரங்கத்தர் - திருவரங்கத்தராகிய விஷ்ணுமூர்த்தி, தாங்க - சுமக்க, மகிழ்வோர் - மகிழ்கின்றவரும், உமை - உமாதேவியாருக்கு அளித்த, ஓர் பங்கத்தர்- ஓர் பக்கத்தையுடையவரும், அங்கத்தர் - என்புமாலையையுடையவருமாகிய நடேசப்பெருமானுடைய, பற்று - இடம்.

சங்கத்தரங்கத்தர் என்பதற்கு - சங்கம் தரங்கத்தர் - சங்கத்தையுடைய க்ஷீராப்திநாதரெனா உரைப்பினும் பொருந்தும். அங்கத்தர்-அழகிய கடவுளென உரைப்பதும்ஒன்று. 60

தேள்ளிமையோர் போற்றுதோறுந் தேம்பொழிற்றே றுங்கனிச்
புள்ளிவரு மால்சேர் புலியூரே—வெள்ளிச் [சேம்
சயிலத் திருப்பார் சனிப்பிறப்பி லென்னைப்
பயிலத் திருப்பார் பதி.

(இ-ள்) தெள்-தெளிவோடு, இமையோர்-தேவர்கள், போற்றுதொறும் - துதிக்குந்தோறும, கனி (கன்னி) - அழியாத, செம்புள் - கருடவாகனத்தில், இவரும்-ஏறும், மால் சேர் - விஷ்ணுமூர்த்தி சேர்தலையும், தேம்பொழில் தோறும்-வாசனைபொருந்திய சோலைகள் தோறும், கனி-பழங்களில், செம்-செவ்வையாகிய, புள்ளி-புள்ளிகள், வரும்-வருகின்ற, ஆல்சேர்-ஆல மரங்கள் சேர்தலையும் பொருந்திய, புலியூர்-

திருப்புலியூரானது, வெள்ளிச் சயிலத்து-திருக்கைலாசத்தில், இருப்பார் - எழுந்தருளியிருப்பவரும், சனிப்பு இறப்பில் - சனன மரணத்தில், என்னை-அடியேனை, பயில-பயிலும்படி, திருப்பார்-திருப்பாதவருமாகிய நடேசப்பெருமானுடைய, பதி - திருநகர். (61)

தங்கவவை சேவிக்கத் தண்ணறைவண் டுண்ணவரும்
புங்கவரே சேரும் புலியூரே-யங்கைதனி
லேந்துதலை யோட்டினு ரேத்துமன்பர் தாய்முலைப்பான்
மாந்துதலை யோட்டினூர் வாழ்வு.

(இ-ள்) தங்கம் அவை-கனகசபையை, சேவிக்க - தரிசிக்க, வரும்-வராநின்ற, புங்கவரே-தேவர்களே, சேரும் - கூடுதலையும், தண்நறை - குளிர்ச்சியாகிய தேனை, வண்டு - வண்டுகள், உண்ண-அருந்த, அரும்பும-மலர்கின்ற, கவர் ஏ-மாக்கப்புகளிலே, சேர்-சேர்தலையும பொருந்திய, புலியூர்-திருப்புலியூரானது, அம் கை தனில்-அழகிய திருக்கரத்தில், ஏந்து - ஏந்திய, தலைஓட்டினார் - பிரமகபாலத்தையுடையரும், ஏத்தும்-துதித்த, அன்பர்-அடியார்கள், தாய் முலைப்பால்-தாய்மாருடைய முலைப்பாலை, மாந்துதலை - குடித்தலை, ஓட்டினார்-நீக்கினவருமாகிய நடேசப்பெருமானுடைய, வாழ்வு - வாழுமிடம். (62)

முத்திதரும் பூசையென்று மூகைதனைப் பேசிடென்று
புத்தரவ மாற்றும் புலியூரே—சித்திமதி
நேமித்தா ரத்தனூர் நித்தியகல் யாணிசிவ
காமித்தா ரத்தனூர் காப்பு.

(இ-ள்) முத்திதரும் என்று-மோக்ஷத்தைத் தருமென்று, புதுஅரவம் - புதுமையாகிய பதஞ்சலிமுனிவர், பூசை - சிவபூசையை, ஆற்றும் - செய்தலையும, மூகைதனை - ஊமைப் பெண்ணை, பேசிடு என்று - பேசுக என்று சொல்லி, புத்தர்

அவம் மாற்றும் - புத்தர்களது தீங்குகளைக் கெடுத்தலையும் பொருந்திய, புலியூர்-திருப்புலியூரானது, சித்தி மதி - சித்திகளையும் புத்திகளையும், நேமித்தார்-நியமித்தவரும், அத்தனார்-யாவருக்குந் தந்தையானவரும், நித்தியம கல்யாணி-நித்திய கல்யாணியாகிய, சிவகாமிதாரத்தனார் - சிவகாம சவுந்தரியாராகிய மனைவியாரை யுடையவருமாகிய நடேசப் பெருமானுடைய, காப்பு - காவலிடம். (63)

சொற்பழுத்த மாமுனியுஞ் சூழுந் துறவினரும்
புற்பதத்தை யாரும் புலியூரே — யுற்பவித்த
கஞ்சமனை வீட்டினார் கம்பறித்தார் செம்பதத்தால்
வெஞ்சமனை வீட்டினார் வீடு.

(இ—ள்) சொல் - சொற்கள், பழுத்த - கனிந்த, மா - பெருமை பொருந்திய, முனியும் - மழமுனிவரும், புல்பதத்தை ஆரும் - புலியினது பாதத்தைப் பொருந்துதலையும், சூழும்-சூழ்ந்திருக்கின்ற, துறவினரும் - துறவிகளும், புல் பதத்தை ஆரும் - புல்லரிசியினலாகிய உணவை உண்ணுதலையும் பொருந்திய, புலியூர்-திருப்புலியூரானது, உற்பவித்த-உதித்த, கஞ்சம-தாமரையாகிய, மன்-நிலைபெற்ற, ஐ-அழகிய, வீட்டினார்-வீட்டையுடைய பிரமனது, கம் பறித்தார் - தலையைக் கொய்தவரும், செம்பதத்தால்-சிவந்த திருவடியினால், வெம்-கொடுமையாகிய, சமனை-இயமனை, வீட்டினார் - உதைத்துத் தள்ளினவருமாகிய நடேசப் பெருமானுடைய, வீடு-திருக்கோயில். (64)

நன்குற்ற மாதருமந் நல்லார்கண் முன்றில்களும்
பொன்கற் படுக்கும் புலியூரே - மேன்கட்
கமலவடி வந்தியார் கட்கருளார் ஞான
வமலவடி வந்தியா ரார்வு.

(இ—ள்) நன்கு-நன்மை, உற்ற-பொருந்திய, மாதர்-பெண்கள், பொன் - அழகிய, கற்பு - கற்புநிலை, அடுக்கும்-

பொருந்துதலும், அ நல்லார்கள் - அந்தப் பெண்களுடைய, முன்றில்கள்-முற்றங்களில், பொன்-பொன்னும், கல் - இரத்தினமும், படுக்கும்-பதித்திருத்தலும் பொருந்திய, புலியூர்-திருப்புலியூரானது, மென் - மென்மையாகிய, கள் - தேனையுடைய, கமலம் அடி - தாமரை மலர்போன்ற திருவடியை, வந்தியார்கட்கு -வந்தனைசெய்யாதவர்களுக்கு, அருளார் - கிருபை செய்யாதவரும், ஞானம் - ஞானமாகிய, அமல வடிவு-சுத்த வடிவம், அந்தியார் - செவ்வானத்தை யுடைய வருமாகிய நடேசப் பெருமானுடைய, ஆர்வு-விருப்பிடம்.

வடிவந்தியார் என்பதற்கு, வடிவந் தீயார் எனப் பிரித்து உருவம் அக்கினியாக இருப்பவர் என்றும், வடிவு அந்தியார்-திருமேனியின் அழகை யுடையாரென்றும் உரை கொள்ளினும் அமையும். அந்தம்-அழகு. அந்தியார்-அந்தத்தையுருதவர். அந்தம் வினையிற் படுதலை, "அந்தித்த நின் குறிப்பை யாரேகடப்பரே" என்பதனுலறிக. (65)

தேம்பொழின்மேற் சேல்பாயச் செங்கழையை மேதியுண்ணப்
பூம்பழனஞ் சாரும் புலியூரே – மேம்படுமெண்
டோளுக்கா சைப்பட்டார் தொண்டா மியற்பகையில்
லாளுக்கா சைப்பட்டா ரார்வு.

(இ–ள்) தேம் - வாசனைபொருந்திய, பொழில்மேல் - சோலையின்மீது, சேல்பாய-கயல்கள்பாய, பூ பழன் நஞ்சு ஆரும்-பொலிவமைந்த பழங்கள் நைந்து நிறைதலும், செம் கழையை-செங்கரும்பை, மேதி உண்ண-எருமைகளுண்ண, பூ பழனஞ் சாரும்-அழகிய வயல்களில் சேர்தலும் பொருந்திய, புலியூர் - திருப்புலியூரானது, மேம்படும் - மேம்பட்ட, எண்தோளுக்கு-எட்டுத் திருப்புயங்கட்கு, ஆசை பட்டார்-திக்காகிய பட்டாடையை யுடையரும், தொண்டு ஆம் - அடிமையாகிய, இயற்பகை இல்லாளுக்கு - இயற்பகை

நாயனாரது மனைவியார்க்கு, ஆசைப்பட்டார் - விருப்பமுற்ற வருமாகிய நடேசப்பெருமானுடைய, ஆர்வு-விருப்பிடம்.(66)

கார்ப்புணர்ப்பிற் பொற்கலையைக் காமுகர்க்கா வேள்வரவைப்
போர்ப்பவனன் பார்க்கும் புலியூரே — பார்ப்பதியாம்
பெண்டனு கத்தடுத்தார் பேர்மணத்திற் சுந்தரனைத்
தொண்டனு கத்தடுத்தார் தோய்வு.

(இ—ள்) கார் புணர்ப்பில் - மேகம்போன்ற திருமேனியில், பொன்கலையை-பீதாம்பரத்தை, போர்ப்பவன்-போர்ப்பவராகிய விஷ்ணுமூர்த்தி, அன்பு-அன்பினை, ஆர்க்கும் - பொருத்துதலும், காமுகர்க்கு ஆக-காமிகளுக்காக, வேள் வரவை - மன்மதனுடைய வருகையை, போர் பவனன் - போர்த்தொழிலையுடைய வசந்தன், பார்க்கும் - எதிர்பார்த்தலும் பொருந்திய, புலியூர் - திருப்புலியூரானது, பார்ப்பதி ஆம்-மலைமகளாகிய, பெண்-நங்கையை, தன் ஆகத்து அடுத்தார்-தமது திருமேனியிலோர் பாகத்தில் வைத்தவரும், பேர் மணத்தில் - பெருமைவாய்ந்த திருமணத்தில், சுந்தரனை - சுந்தரமூர்த்தி சுவாமிகளை, தொண்டன் ஆக - அடியாராக, தடுத்தார் - தடுத்தாட்கொண்டவருமாகிய நடேசப்பெருமானுடைய, தோய்வு-வியாபக இடம். (67)

தென்னூர் பொழிலிடத்துஞ் செங்கனக மன்றிடத்தும்
புன்னாகத் தோடார் புலியூரே — நன்னீரை
விட்டுவிளக் கிட்டார் வினைதோலைத்தார் மாட்டினுமன்
பொட்டுவிளக் கிட்டா ருறைவு.

(இ—ள்) தென் - அழகு, ஆர் - பொருந்திய, பொழில் இடத்தும்-சோலையில், புன்னாகம் தோடு ஆர்-புன்னாகமலர்கள் நிறைதலும, செம் கனகம் - சிவந்த பொன்னாற் செய்யப்பட்ட, மன்றிடத்தும்-சபையில், புல் நாகத்தோடு-வியாக்கிரபாதமுனிவர் பதஞ்சலி முனிவரோடு, ஆர் - இருந்தலும்

பொருந்திய, புலியூர்-திருப்புலியூரானது, நல் - நல்ல, நீரை - சலத்தை, விட்டு-வார்த்து, விளக்கு இட்டார்-தீபம் வைத்த வராகிய நமிநந்தியடிகளது, வினை-இருவினையும், தொலைத்து-ஒழித்து, ஆர் மாட்டினும - எவரிடத்தினும், அன்பு ஒட்டு வின்ள கிட்டார் - அன்பினதுபற்று நீங்கினால் நெருங்காத வருமாகிய நடேசப்பெருமானுடைய, உறைவு - இடம். வின்ள-காரணப்பொருளில்வந்த செயவெனெச்சம்; ஒற்றுத் தொகுத்தல். (68)

பெட்பின்முகில் கண்டாற் பிறந்திறந்தா லேற்றேகைப்
புட்பரதங் காட்டும் புலியூரே - யுட்பரிவாற்
கையார மாயுரைத்தார்க் காத்தாற்கீழ் நூனால்வர்க்
கோய்யார மாயுரைத்தா ரூர்.

(இ-ள்) பெட்பின்-விருப்பத்தோடு, முகில்கண்டால் - மேகத்தைக் காணின், எல் தோகை புள்-பிரகாசம் பொருந்திய கலாபத்தையுடைய மயில்கள், பரதம் காட்டும் - நடனத்தைச் செய்தலும், பிறந்து இறந்தால்-பிறந்திறந்தால், எற்று-அச்சனன மரணத்தைக் கெடுக்கத்தக்க, ஓகை - மகிழ்வினையுடைய, புட்ப ரதம்-புட்பவிமானத்தை, காட்டும் - கொடுத்தலும் பொருந்திய, புலியூர்-திருப்புலியூரானது, உள்-மனத்திலுள்ள, பரிவால்-அன்பினால், கை ஆரம் ஆக உரைத்தார்-தமது கரத்தைச்சந்தனக் கட்டையாகத் தேய்த்தவராகிய மூர்த்திநாயனாரை, காத்து-இரட்சித்து, ஆல் கீழ் - கல்லாலினடியில், நூல் - சைவாகம நூற்பொருளை, நால்வர்க்கு - சனகர் முதலிய நான்கு முனிவர்களுக்கு, ஒய்யாரம் ஆய் - மகிழ்ச்சியுண்டாக, உரைத்தார்-உபதேசித்தவராகிய நடேசப்பெருமானுடைய, ஊர்-திருநகர். (69)

கட்டுறு கோட்டுப்பூக் கமலப்பூத் தேனூறிப்
புட்டரிக்க வீறும் புலியூரே – சிட்டர்தோழ

மின்னு டகத்திஞன் மேய்ந்தமன்று ளானந்த
நன்னு டகத்தின னடு

(இ-ள்) கட்டு உறு-முருக்குற்ற, கோட்டுபூ-கோட்டுப் பூக்களில், தேன் நாறி-வண்டுகள் கிண்டி, புட்டு-துளைத்து, அரிக்க - சிதைக்க, விறும் - மலர்தலும், கமலப்பூ-தாமரைப் பூக்கள், தேன்ஊறி - தேன்மிகுந்து, புள் - அன்னங்கள், தரிக்க - தங்க, வீறும் - பெருமை அடைதலும் பொருந்திய, புலியூர்-திருப்புலியூரானது, சிட்டர்-சிவஞானிகள், தொழ-வணங்க, மின்ஆடகத்திஞல்-பிரகாசிக்கின்ற பொன்னினல், மேய்ந்த - வேய்ந்த, மன்றுள் - சபையில், நல்ஆனந்த நாடகத்திஞன் - நன்மையாகிய ஆநந்தத் திருக்கூத்தையுடைய நடராசப் பெருமானுடைய, நாடு-இடம். மேய்ந்த-வேய்ந்த வென்பதன் மரூஉ. (70)

மேகம் பயில்குழலார் மென்களமுந் தண்பணையும்
பூகம் பொருவும் புலியூரே — மாகமோடு
தாலம் பணிந்திடுவார் தாழ்பவளக் கோடீர
மேலம் பணிந்திடுவார் வீடு.

(இ-ள்) மேகம் பயில் குழலார் - மேகத்தையொத்த கூந்தலையுடைய பெண்களது, மென் களம் - மென்மையாகிய கண்டம், பூகம்-கமுகமரத்தை, பொருவும் - ஒத்தலும், தண் பணை - (உழுத) குளிர்ச்சியாகிய வயலில், பூ கம்பு ஒருவும்-தாமரைப் பூக்களும் சங்குகளும் நீங்குதலும் பொருந்திய, புலியூர் - திருப்புலியூரானது, மாகமொடு - விண்ணுலகத்தவராலும், தாலம் - பூவுலகத்தவராலும், பணிந்திடுவார்-பணியப்பெற்றவரும், தாழ் - தாழ்ந்த, பவளம் - பவள நிறம் போன்ற, கோடீரமேல் - சடையின்மேல், அம்பு-கங்கையை, அணிந்திடுவார்-தரித்தவருமாகிய நடேசப்பெருமானுடைய, வீடு - கோயில். (71)

கங்குல்வாய்த் தீபங் களுக்கும்வெயி லுக்குமணிப்
பொங்கரா வீடாம் புலியூரே — சங்கரா
வென்பா ரிடத்திரு னீமத் திடைநடித்த
வன்பா ரிடத்திறுன் வாழ்வு.

(இ—ள்) கங்குல்வாய்-இரவில்வைக்கும், தீபங்களுக்கு - விளக்குகளுக்கு, மணிபொங்கு அராஈடு ஆம - இரத்தினங் களையுடைய விளங்குகின்ற பாமபு ஒப்பாதலும், வெயிலுக்கு- வெயிலுக்குத் தங்க, மணி - அழகிய, பொங்கர் ஆ வீடு ஆம்- சோலையிலுள்ள ஆச்சாமரம் வீடாதலும பொருந்திய, புலி யூர் - திருப்புலியூரானது, சங்கரா என்பார் இடத்திறுன் - சங்கரா என்று துதிப்பவரிடத்தி லிருப்பவரும், ஈமத்திடை- மயானத்தில், நடித்த - நடனஞ்செய்த, வன் பாரிடத்தி றுன்-வன்மையாகிய பூதகணங்களை யுடையருமாகிய நடே சப்பெருமான், வாழ்வு - வாழுமிடம். (72)

அல்லிச் சுனைகளினு மாலையினு நாரியே
புல்லிக் குடையும் புலியூரே — கல்லிற்
றலையைத்தா மோதினர் தம்மையாண் டெண்ணெண்
கலையைத்தா மோதினர் காப்பு.

(இ—ள்) அல்லி - ஆம்பல் மலர்களையுடைய, சுனைகளில்- தடாகங்களில், நாரியே - பெண்களே, புல்லிக்குடையும் - பொருந்தி நீராடுதலும், ஆலையினும் - கருப்பாலையினும், நாரியே - இரசம்பொருந்திய, புல் இக்கு உடையும்-தோகை யையுடைய கரும்புகள் உடைதலும் பொருந்திய, புலியூர் - திருப்புலியூரானது, கல்லில் -(வஸ்திரமொலிக்கும) கல்லிலே, தலையை மோதினர் தம்மை ஆண்டு - தம்முடைய சிரசைத் தாக்கினவராகிய திருக்குறிப்புத் தொண்ட நாயனாரை அடிமை கொண்டு, எண்ணெண்கலையை - அறுபத்துநான்கு கலைகளையும், தாம் ஓதினர்- (ஆன்மாக்களுய்யும் பொருட்டுத்)

தாம் திருவாய் மலர்ந்தருளினவராகிய நடேசப் பெருமானுடைய, காப்பு - காவலிடம். (73)

வெற்பிணைக்குங் கோங்கைமின்னார் வீடுஞ்சேந் தாமரையும்
பொற்பளிக்குஞ் சாரும் புலியூரே — கற்புணையா
வோதங் கடந்துவந்தா ரோதுதமிழ்க் கொண்டிருப்போற்
பாதங் கடந்துவந்தார் பற்று.

(இ—ள்) வெற்பு இணைக்கும் - மலையை ஒத்திருக்கின்ற, கொங்கை - தனத்தையுடைய, மின்னார் - பெண்களது, வீடு-வீடுகள், பொன் - பொன்வீடுகளாகவும், பளிக்கு-பளிக்கு வீடுகளாகவும், சாரும் - பொருந்துதலும், செந்தாமரையும்-சிவந்ததாமரை மலர்களிலும், பொற்பு - அழகாகிய, அளி குஞ்சு - வண்டின் குஞ்சுகள், ஆரும் - நிறைதலும் பொருந்திய, புலியூர் - திருப்புலியூரானது, கல்புணையாக - (சமணர்கள் பிணித்த) கருங்கல்லைத் தெப்பமாகக் கொண்டு, ஓதம் - கடலை, கடந்து வந்தார் - கடந்துவந்தவராகிய திருநாவுக்கரசு சுவாமிகள், ஓது-பாடியருளிய, தமிழ்க்கு-தேவாரப் பதிகங்கட்காக, ஒண் - ஒளிபொருந்திய, திரு - அழகிய, பொன் - பொன்போன்ற, பாதங்கள் - திருவடிகளை, தந்து உவந்தார் - கொடுத்து மகிழ்ந்தவராகிய நடேசப் பெருமானுடைய, பற்று - விருப்பிடம். (74)

மிக்ககதிர்த் தேர்விசும்பை மேலோர் தவத்தைவிருப்
புக்களவித் தாக்கும் புலியூரே — சக்கரத்தை
நந்தரிக்கிட் டன்புடையா னுளுஞ் சிவகாம
சுந்தரிக்கிட் டன்புடையான் றேய்வு.

(இ—ள்) விரு-விருக்ஷங்கள், விசும்பை - ஆகாயத்தை, அளவி-அளாவி, புக்கு-புகுந்து, மிக்க-மிகுந்த, கதிர்-கிரணங்களையுடைய சூரியனது, தேர்-இரதத்தை, தாக்கும் - தாக்குதலும், மேலோர் தவத்தை-பெரியோர்கள் தவத்தினை, விருப்

புக்கள் - ஆசைகளை, அவித்து ஆக்கும் - கெடுத்துச் செய்தலும் பொருந்திய, புலியூர்-திருப்புலியூரானது, சக்கரத்தை-சக்கராயுதத்தை, நந்து அரிக்கு - சங்கினையேந்திய விஷ்ணுமூர்த்திக்கு, இட்ட-கொடுத்தருளிய, அன்பு உடையான் - கிருபையை யுடையவரும், நாளும் - எப்போதும், சிவகாம சுந்தரிக்கு இட்டன் - சிவகாம சவுந்தரியார்க்கு இஷ்டரும், புடையான்-பக்கத்திலுடையவருமாகிய நடேசப் பெருமானுடைய, தோய்வு-வியாபக இடம். (75)

மன்னுமலை தந்துவந்து மாக்களிற்றைப் பெற்றுமைநேர்
பொன்னிநதி சூழும் புலியூரே — சென்னிமதிப்
பெம்மா னிடக்கையான் பேரம் பலத்தாடுஞ்
செம்மா னிடக்கையான் சேர்வு.

(இ-ள்) மன்னும்-மிக்க, அலை தந்து வந்து - அலைகள் வீசிவந்து, மா-பெரிய, களிற்றை-களிறுமீன்களை, பெற்று-படைத்து, (இதனால்) மன்னும்-நிலைபெற்ற, மலைதந்து-இமயமலைபெற, மா-பெருமை பொருந்திய, களிற்றை - விநாயகக் கடவுளை, உவந்து-மகிழ்ந்து, பெற்று - ஈன்று, (இருக்கும்) உமைநேர்-உமாதேவியாரையொத்த, பொன்னிநதி-காவேரி நதி, சூழும்-சூழ்ந்திருக்கின்ற, புலியூர் - திருப்புலியூரானது, சென்னி-சிரசில், மதி-சந்திரனைத் தரித்த, பெம்மான் - பெருமானும், இடக்கையான் - தமருகத்தையுடையவரும், பேர் அம்பலத்து-பெருமை பொருந்திய சபையில், ஆடும்-நடிக்கா நின்ற, செம்மான் இடக்கையான் - சிவந்த மானைத் தரித்த இடது திருக்கரத்தை யுடையவருமாகிய நடேசப் பெருமானுடைய, சேர்வு-இடம். (76)

மேதகுவிண் டாவுறலான் மேலம் புலியுறலாற்
பூதரமோப் பாகும் புலியூரே — மோதிப்
பொருமாதங் கத்துரியார் போற்றுலகீ ரேழுந்
தருமாதங் கத்துரியார் சார்பு.

(இ-ள்) மேதகு-மேன்மை பொருந்திய, விண் - விண்ணுலகத்தவர், தாவுறலால்-வருதலாலும், மேல் - மேலாகிய, அம-அழகினையுடைய, புலிஉறலால் - வியாக்கிரமபாத முனிவரிருத்தலாலும், மேதகு-மேன்மை பொருந்திய, விண் - ஆகாயத்தில், தாவுறலால் - தங்குதலாலும், மேல் - தனக்கு மேல், அம்புலி உறலால் - சந்திரன் பொருந்துதலாலும், பூதரம்-மலையை, ஒப்பு ஆகும்-ஒத்திருக்கும், புலியூர் - திருப்புலியூரானது, மோதி-தாக்கி, பொரு-சண்டைசெய்த, மாதங்கத்து உரியார்-யானையின் தோலை யுடையவரும், போற்று உலகு ஈரேழும்-திதிக்கும் பதினாலுலகங்களும், தரு-பெற்ற, மாது-உமாதேவியாரை, அங்கத்து உரியார் - திருமேனியில் உடையவருமாகிய நடேசப் பெருமானுடைய, சார்பு - இடம். (77)

அங்காடி யாங்கம் பலைசங்கா ரஞ்சேறிவாற்
பொங்காழி நேராம் புலியூரே – சங்காழி
மாலாஞ் சரத்தர் மணமலிசெம் பொன்மடலைப்
போலாஞ் சரத்தர் புரி.

(இ-ள்) அங்காடி-கடைவீதி, ஆம் - ஆகிய, கம்பலை - முழக்கமும், சங்கு ஆரம் செறிவால் - சங்குகளும் முத்துக்களும் நெருங்கியிருத்தலால், ஆம - சலத்தையும, கம்பலை - முழக்கத்தையும், சங்கு-சங்கத்தையும், ஆரம்-முத்துக்களையும், செறிவால்-பொருந்தி, பொங்கு ஆழி-பொங்குகின்ற கடலை, நேர் ஆம்-ஒக்கும், புலியூர் - திருப்புலியூரானது, சங்கு ஆழி மால் ஆம்-சங்கு சக்கரத்தையுடைய விஷ்ணுமூர்த்தியாராகிய, சரத்தர்-அம்பினையுடையவரும், மணம்-வாசனை, மலி-நிரம்பிய, செம்-சிவந்த, பொன்-பொன்னாற் செய்த, மடலை - மடலினை, போல் ஆம் - போன்ற, சரத்தர் - கொன்றைப்பூ மாலையை யுடையவருமாகிய நடேசப் பெருமானுடைய, புரி - திருநகர். (78)

வாய்ந்த வலம்புரிப்பூ மாத்தழுவி நந்தவனம்
பூந்துளவத் தோனும் புலியூரே-யாய்ந்தமலர்ச்
செங்கைக் குழையினர் திண்டோ டொடுங்காதிற்
சங்கைக் குழையினர் சார்பு.

(இ-ள்) *வாய்ந்த - பொருந்திய, வலம்புரிப்பூ-நந்தியா வட்ட மலரையும, மாதழுவி-வண்டையும பொருந்தி, (இருத் தலால்) நந்தவனம-சோலை, வாய்ந்த-சிறந்த, வலமபுரி-வலம புரிச்சங்கினையும், பூ மா - பூதேவி சீதேவியையும், தழுவி - தழுவி, பூ துளவததோன் ஆம - அழகிய துளவமாலையை அணிந்த விஷ்ணுமூர்த்தியையொக்கும, புலியூர் - திருப்புலியூ ரானது, ஆய்ந்தமலர்-தாமரை மலரையொத்த, செம-சிவந்த, கைக்கு - திருக்கரத்தில், உழையினர் - மானையுடையவரும, திண்-வலிமையாகிய, தோள் - புயங்களை, தொடும-அளாவு கின்ற, காதில்-திருச்செவியில், சங்கு குழையினர் - சங்க குண்டலத்தையுடையவருமாகிய நடேசப்பெருமானுடைய, சார்பு - இடம். சங்கை - ஐ, சாரியை.* (79)

தாலம் படைத்தலர்க்கட் டானொழுக லாற்பிரமன்
போலும் பொழில்சூழ் புலியூரே-யால
மருந்தக்கண் டங்கறுப்பா ரல்லல்வினை யன்பர்
வருந்தக்கண் டங்கறுப்பார் வாழ்வு.

(இ-ள்) *தாலம் படைத்து - உலகத்தைப் படைத்து, அலர்க்கண் தான் ஒழுகலால்-தாமரை மலரில் தான்வசித்த லாலும், தாலம படைத்து-பனையையுடைத்தாய், அலர் கள் தான் ஒழுகலால்-மலரில் தேன் ஒழுகுதலாலும, பிரமன்-பிர மதேவனை யொக்கும, பொழில்சூழ்-சோலைசூழ்ந்த, புலியூர்-திருப்புலியூரானது, ஆலம் - விஷத்தை, அருந்த - உண்டதி னல், கண்டம் - திருமிடறு, கறுப்பார் - கறுத்தவரும், அன் பர் - தொண்டர்கள், வருந்த - வருத்தமடைய, கண்டு -*

அதனைப்பார்த்து, அல்லல்-துன்பமாகிய, வினை-தீவினையை, அறுப்பார் - நீக்குபவருமாகிய, நடேசப்பெருமானுடைய, வாழ்வு - வாழுமிடம். (80)

மின்னுமணி வேழத்தான் மேவரம்பை யால்வயல்கள்
பொன்னுலகுக் கொப்பாம் புலியூரே - யுன்னியொரு
காலநமா வென்றார் கருத்துற் றுருத்தெதிர்ந்த
தானமா வென்றார் தலம்.

(இ-ள்) மின்னும் - பிரகாசிக்கின்ற, மணி - சிந்தாமணியினாலும், வேழத்தால் - ஐராவதமென்னும யானையினாலும, மேவு-விரும்புகின்ற, அரம்பையால்-அரம்பா ஸ்திரியினாலும், மின்னும் - விளங்குகின்ற, மணிவேழத்தால் - முத்துக்களையுடைய கரும்பினாலும, மேவு - பொருந்திய, அரம்பையால்-வாழைகளினாலும், வயல்கள்-கழனிகள், பொன்னுலகுக்கு-விண்ணுலகத்துக்கு, ஒப்புஆம - ஒப்பாகும, புலியூர் - திருப்புலியூரானது, உன்னி - தியானித்து, ஒருகால் - ஒருதரம், நமாஎன்றார் - நமாவென்று சொல்லுகின்ற அடியாருடைய, கருத்து உற்று - மனத்திலமர்ந்து, உருத்து - கோபித்து, எதிர்ந்த-எதிர்த்த, தானம் மா-மதத்தையுடைய யானையை, வென்றார் - வென்றவருமாகிய நடேசப்பெருமானுடைய, தலம் - திருநகர். நம என்பது வணக்கம்; ஈண்டு விகாரமாயிற்று. (81)

மாகமுறைந் தாமைவெள்ளை வாரணமூர்ந் தோடைமகப்
போகிநிக ராகும் புலியூரே - தோகைமயிற்
புள்ளே றிவருவார் போதமழ லைக்குவந்தார்
வெள்ளே றிவருவார் வீடு.

(இ-ள்) மாகம் - மிக்க சலத்தில், உறைந்து - தங்கி, ஆமை - ஆமையும், வெள்ளை வாரணம் - வெண்மையாகிய சங்கும், ஊர்ந்து-தவழ்ந்து, (இருத்தலால்) ஓடை-ஓடைகள்,

மாகம் உறைந்து-விண்ணுலகத்தில் வசித்து, ஆட்-நீரையுண்ட, மை - மேகத்தையும், வெள்ளைவாரணம - வெள்ளையானையை யும், ஊர்ந்து-செலுத்தி, (வருகின்ற) மகமபோகி-யாகத்தை யுடைய இந்திரனை, நிகர் ஆகும் - ஒக்கும், புலியூர்-திருப்புலி யூரானது, தோகை மயில் புள் - கலாபத்தையுடைய மயிலின் மேல், ஏறி வருவார்-இவர்ந்துவரும் முருகக்கடவுளுடைய, போதம் மழலைக்கு உவந்தார் - ஞானமாகிய மழலைச்சொற் களுக்கு மகிழ்ந்தவரும், வெள்ஏறு - வெண்மையாகிய இட பத்தில், இவருவார் - ஏறுபவருமாகிய நடேசப்பெருமா னுடைய, வீடு - திருக்கோயில். (82)

தேன்றிகழு மாமலரேந் திப்பரவித் தாழ்ந்தடியார்
போன்றகழி சூழும் புலியூரே—யூன்றி
யுளத்தினய னத்த னுவந்துதொழு தேத்துங்
குளத்தினய னத்தன் குடி.

(இ—ள்) தேன்திகழும் - தேன்பொருந்திய, மாமலர் ஏந்தி-பெருமைவாய்ந்த புட்பங்களைத்தாங்கி, பரவி-துதித்து, தாழ்ந்து - வணங்கி (வரும்), அடியார் - அடியார்கள், போன்று - ஒத்து, தேன் திகழும - தேன் விளங்குகின்ற, மாமலர் ஏந்தி - பெருமைதங்கிய பூக்களைத்தாங்கி, பரவி - விசாலித்து, தாழ்ந்து - ஆழ்ந்து (இருத்தலால்) அகழி சூழ்-கிடங்கு சூழ்கின்ற, புலியூர்-திருப்புலியூரானது, உளத்தின்-மனத்தில், ஊன்றி - பதித்து, அயன் - பிரமதேவனும், நத்தன் - விஷ்ணுமூர்த்தியும், உவந்து - மகிழ்ந்து, தொழுது-வணங்கி, ஏத்தும் - துதிக்கின்ற, குளத்தில் நயனத்தன் - நெற்றியில் அக்கினி நேத்திரத்தை யுடையவருமாகிய நடேசப் பெருமானுடைய, குடி - வசிக்குமிடம். (83)

ஆசின்மதி னூலளவிட் டாங்குயர்ந்து நீறணிந்து
பூசுரர்போ லாகும் புலியூரே—மாசு

கழலாத வன்மதியார் கண்ணுறார் கண்ணு
மழலாத வன்மதியா ரார்வு.

(இ-ள்) ஆசு இல் மதில் - குற்றமில்லாத மதிலானது, நூல் - நூலினால், அளவு இட்டு - அளவிடப்பட்டு, ஆங்கு உயர்ந்து - ஆகாயவரைக்கும் உயர்ந்து, நீறு அணிந்து - சுண்ணந்தேய்க்கப்பட்டு (இருத்தலால்), நூல்-வேதமுதலிய நூல்களை, அளவு இட்டு - ஆராய்ந்தறிந்து, ஆங்கு - அங்கு, உயர்ந்து - (அதனால்) உயர்வடைந்து, நீறு அணிந்து - திருநீறணிந்து (வரும்), பூசுரர்போல் ஆம் - வேதியரைப்போன்றிருக்கின்ற, புலியூர் - திருப்புலியூரானது, மாசு - குற்றம், கழலாத - நீங்காத, வன்மதியார்கண் - கடினசித்தத்தையுடையவர்களிடத்தில், உறார்-பொருந்தாதவரும், கண் ஆம்-திரிநேத்திரங்களாகிய, அழல் ஆதவன் மதியார்-சோமசூரியாக்கினிகளையுடையவருமாகிய நடேசப் பெருமானுடைய, ஆர்வு - விருப்பிடம். கண்ணுமழலாதவன் மதியாரெனக் கூறினுரேனும் - அழலாதவன்மதியார் கண்ணரென்பது பொருளாகக் கொள்க. (84)

எற்கோ வரையா கிவரலா லைங்கரனேர்
பொற்கோ புரஞ்சேர் புலியூரே - நற்காற்
கிசைக்குஞ் சிலம்பினு னீரைம் முகத்தா
னசைக்குஞ் சிலம்பினு னார்வு.

(இ-ள்) எல்கோவரை ஆகி - சூரியமண்டலம் வரைக்குமுயர்ந்து, வரலால் - வருதலால், எல்-விளக்கமாகிய, கோ-கண்களையுடைய, வரை - மலையையொத்த, ஆகு - பெருச்சாளியில், இவரலால் - ஏறுதலினால், ஐங்கரன் - ஐந்துதிருக்கரங்களையுடைய விநாயகக் கடவுளை, நேர் - ஒத்த, பொன்-பொன்னாலமைந்த, கோபுரம்-கோபுரங்கள், சேர் - பொருந்திய, புலியூர்-திருப்புலியூரானது, நல் காற்கு-நன்மையாகிய

திருவடிகட்கு, இசைக்கும்-ஒலிக்கின்ற, சிலம்பினன்-சிலம் பினையுடையவரும், ஈரைம் முகத்தான் - பத்து முகங்களை யுடைய இராவணன், அசைக்கும்-அசைத்த, சிலம்பினன் - கைலாசகிரியை யுடையவருமாகிய நடேசப்பெருமானுடைய ஆர்வு-விருப்பிடம். எற்கோ-பகற்கரசன் என்பது பொருள்.

காற்காட்டி யாறுதலைக் காட்டியடுத் தோர்க்கயில்வேள்
போற்கா வனஞ்சூழ் புலியூரே – பாற்கோலக்
குட்டிக்கங் கூட்டினார் கொச்சைமுக மாமனுக்கன்
றொட்டிக்கங் கூட்டின ரூர்.

(இ—ள்) அடுத்தோர்க்கு - தமமை அடுத்தவர்களுக்கு, கால்காட்டி-தென்றலைக் கொடுத்து, ஆறுதலைகாட்டி-இளைப் பாறுதலைச் செய்து, (இதனால்) கால்காட்டி - திருவடிகளைக் காட்டி, ஆறுதலை காட்டி - ஆறுதிருமுகங்களையுங் காட்டி, (வரும்) அயில்வேள் போல் - வேலேந்திய முருகக்கடவுளைப் போல, காவனம் சூழ்-சோலைகள் சூழ்ந்த, புலியூர் - திருப் புலியூரானது, பால்-பாலை, கோலம் குட்டிக்கு-பன்றிக்குட்டி களுக்கு, அங்கு ஊட்டினார் - அவ்விடத்தில் தாயாய்வந்து ஊட்டினவரும, கொச்சைமுகம் - ஆட்டுத்தலையை, மாம னுக்கு - மாமனாகிய தக்கனுக்கு, அன்று - அக்காலத்தில், ஒட்டி - சேர்த்து, கம்-தலையை, கூட்டினார் - கூட்டினவரு மாகிய நடேசப் பெருமானுடைய, ஊர்-தலம். (86)

மெய்ப்பவங்காய்ந் தங்கமல மிக்கசிவ கங்கையது
பொய்ப்பினமறைக் கோப்பாம் புலியூரே – மைப்பனைபோற்
றேங்கத் தனுக்கையர் தூயநெடு மால்வரையாந்
தங்கத் தனுக்கையர் சார்பு.

(இ—ள்) மெய்ப் பவம் காய்ந்து - உடம்போடு கூடிய பிறவியை யொழித்து, அம் கமலம் மிக்க-அழகிய தீர்த்தங் களு ளுயர்ந்த, சிவகங்கை - சிவகங்கையானது, மெய்ப்ப -

உண்மை பொருந்த, அங்கு-அவ்விடத்தே, ஆய்ந்து-ஆராயப் பட்டு, அங்கம்-ஷடங்கங்களையுடைய, அலம்-அமைவு, மிக்க-மிகப்பெற்ற, பொய்ப்பு இல் - பொய்படுதல் இல்லாத, மறைக்கு - வேதங்கட்கு, ஒப்பு ஆம் - ஒப்பாக இருக்கின்ற, புலியூர்-திருப்புலியூரானது, மை பனைபோல்-கரிய பனையைப் போல், தொங்கு அத்தனுக்கு-தொங்குகின்ற துதிக்கையை யுடைய விநாயகக் கடவுளுக்கு, ஐயர்-பிதாவும், தூய - பரி சுத்தமாகிய, நெடு-நீண்ட, மால்-பெரிய, வரை ஆம் - மேரு வாகிய, தங்கம் தனு-பொன்வில்லைத் தரித்த, கையர் - திருக் கரத்தை யுடையவருமாகிய, நடேசப் பெருமானுடைய, சார்பு-இடம். (87)

காலா யிரத்தாற் கதிர்மணிச்சூட் டாற்சேடன்
போலா லயஞ்சேர் புலியூரே – பாலாழி
தந்தநஞ்சு மப்பார் தமையுங்க ளஞ்சடையிட்
டிந்தநஞ்சு மப்பா ரிடம்.

(இ-ள்) கால் ஆயிரத்தால் - ஆயிரங்கால்களாலும், கதிர்மணி - பிரகாசம் பொருந்திய இரத்தினங்கள் பதித்த, சூட்டால்-சிகரங்களாலும், காலாயிரத்தால் - அளவில்லாத கால்களாலும், கதிர்-பிரகாசம் பொருந்திய, மணி - இரத்தி னங்களையுடைய, சூட்டல் - உச்சியினாலும், சேடன் - ஆதி சேடன், போல்-போன்ற, ஆலயம் சேர்-ஆயிரக்கால் மண் டபம் பொருந்திய, புலியூர்-திருப்புலியூரானது, பாலாழி - திருப்பாற்கடல், தந்த-தந்த, நஞ்சும்-விஷத்தினையும், அப்பு ஆர் தமையும-கங்கையையும் ஆத்திமாலையையும், (முறையே) களம-திருமிடற்றிலும்,சடை-சடையிலும், இட்டு-அணிந்து, இந்தனம்-விறகினை, சுமப்பார் - சுமந்தவராகிய நடேசப் பெருமானுடைய, இடம்-வீடு. (88)

தக்க கலைதெரிய நன்னூல் வியாசரையோப்
புக்கொடிக்கம் பஞ்சேர் புலியூரே – யெக்கியத்திற்

பல்லுக்கேட் டாதவனார் பாறப் புடைத்துமறைச்
சொல்லுக்கேட் டாதவனார் தோய்வு.

(இ—ள்) தக்ககலை தன்னால்-தகுதியாகிய வஸ்திரத்தினாலும், தெரியல் தன்னால் - பூமாலையினாலும், தக்க-மேம்பட்ட, கலை - சாஸ்திரங்களை, தெரியல்தன்னால் - தன்னலறிதலையுடைய, வியாசரை - வேதவியாசரை, ஒப்பு - ஒப்பாகிய, கொடிக்கம்பம் - துவசத்தம்பம், சேர் - சேர்ந்த, புலியூர் - திருப்புலியூரானது, எக்கியத்தில்-தக்கனுடைய யாகத்தில், பல்கெட்டு - பல்விழுந்து, ஆதவனார் - சூரியன், பாற-கெட, புடைத்து - தகர்த்து, மறைச்சொல்லுக்கு-வேதவாக்கியத்துக்கு, எட்டாதவன் - எட்டாதவராகிய நடேசப்பெருமான், ஆர்-பொருந்திய, தோய்வு-வியாபக இடம். (89)

பாடுமிசை யாற்றனக்கும் பத்தாற் சினகரம்வெண்
பூடணமின் னாளாம் புலியூரே – வேட
னடித்தரிக்குங் கோவா ரமரர்துய ராலங்
குடித்தரிக்குங் கோவார் குடி.

(இ-ள்) பாடும்இசையால் - பலரும்சொல்லும் புகழினாலும், தனம் கும்பத்தால் - பொன்னாற்செய்த கலசங்களினாலும், சினகரம - கோவில், பாடும் - பாடாநின்ற, இசையால் - இசையினாலும், தனம் கும்பத்தால் - தனங்களாகிய குடத்தினாலும், வெண்பூடணம் - வெண்மையாகிய ஆபரணத்தையணிந்த, மின்னாள் ஆம்-கலைமகளைஒக்கும, புலியூர்-திருப்புலியூரானது, வேடன் - கண்ணப்பநாயனாரது, அடி-திருவடியை, தரிக்கும் - தரித்த, கோவார் - நேத்திரத்தையுடையவரும், அமரர்துயர் - தேவர்களுடைய துன்பத்தை, ஆலங்குடித்து - விஷத்தையருந்தி, அரிக்கும - கெடுக்கும, கோ - தலைவருமாகிய நடேசப்பெருமான், ஆர் - இருக்கின்ற, குடி - இருப்பிடம்.

வேடன் அடித்தரிக்கும் கோவார் என்பதற்குக் கண்ணப்பனுர் வைத்த காலின் குறிப்பினுல் தரிக்கப்பெற்ற கண்ணையுடையவரென்று உரைப்பது மொன்று. (90)

வான்மீ தெழும்புகையான் மாவிரதத் தாற்கதிரோன்
போன்மா மகஞ்செய் புலியூரே — தேன்மாருத்
தோடா யிரந்தான் றுலங்கம் புயன்றலையை
யோடா யிரந்தா னுறைவு.

(இ-ள்) வான்மீது - ஆகாயத்தின்மேல், எழும் - எழாநின்ற, புகையால்-புகையினுலும், மாவிரதத்தால் - பெருமை வாய்ந்த விரதத்தினுலும், வான்மீது - ஆகாயத்தின்மேல், எழும்புகையால் - உதித்தலாலும், மா - குதிரை கட்டிய, இரதத்தால்-தேராலும், கதிரோன்போல்-சூரியனைப்போல், மா - பெருமைபொருந்திய, மகம் - யாகங்கள், செய் - செய்யப்படுகின்ற, புலியூர் - திருப்புலியூரானது, தேன் - தேன், மாருத - நீங்காத, ஆயிரம் தோடுதான் - ஆயிரம் இதழ்கள், துலங்கு - விளங்கா நின்ற, அம்புயன் - தாமரையில் வாசஞ்செய்யும பிரமதேவனது, தலையை-சிரசை, ஓடாய் - ஓடாகக் கொண்டு, இரந்தான் - பலி யேற்றவராகிய நடேசப் பெருமான், உறைவு - வசிக்குமிடம். (91)

ஆங்கருணை யோடமுதீந் தங்கவலை நீக்கிமடம்
பூங்கலையிந் தோப்பாம் புலியூரே — வாங்கும்
வரங்கம் பலவாணன் வாயில்காத் தன்பர்க்
கிரங்கம் பலவாண னில்.

(இ-ள்) ஆம்கருணையோடு - அமைந்தபொரிக்கறியுடன், அமுது ஈந்து - அன்னத்தைக் கொடுத்து, அம் கவலைநீக்கி-நீர்க்கவலையுந் தணித்து, மடம் - மடங்கள், ஆம் - ஆகிய, கருணையோடு - கிருபையோடு, அமுது ஈந்து - அமிர்தத்தைக்கொடுத்து, அங்கு அவலை நீக்கி - அவ்விடத்திற்றுன்

பத்தை நீக்கி, பூ கலை இந்து ஒப்பு ஆம் - அழகிய கலைகளை யுடைய சந்திரனை யொத்திருக்கும், புலியூர் - திருப்புலியூரானது, வாங்கும்-பெற்ற, வரம்-வரத்தையும், கம் - தலையையும், பல-பலவாகவுடைய, வாணன்-வாணாசுரன், வாயில்காத்து-வாயிலைக்காத்து, அன்பர்க்கு - அடியவர்களுக்கு, இரங்கு-இரங்காநின்ற, அம்பலவாணன் - பொன்னம்பலத்திலெழுந் தருளியிருப்பவராகிய நடேசப்பெருமானுடைய, இல்-திருக்கோயில். (92)

ஐயம்பெய் தேதா ரணிமகிழிட் டங்கசன்போற்
பொய்யில்சத் திரஞ்சூழ் புலியூரே — பையரவு
மீதாம் புயத்தினர் மிக்கமுயன் மேலழுத்தும்
பாதாம் புயத்தினர் பற்று.

(இ-ள்) ஐயம் பெய்து - இரப்பவர்க்குப் பிச்சையிட்டு, தாரணி - உலகத்திலுள்ளோர், மகிழ் இட்டு-களிப்புறஉணவு தந்து, (இதனால்)ஐ அம்பு எய்து-பஞ்சபாணங்களைச்செலுத்தி, தார் அணி மகிழ் இட்டு - அழகிய மகிழம் பூ மாலையை அணிந்து (வருகின்ற), அங்கசன்போல் - மன்மதன்போல, பொய் இல் - பொய்யற்ற, சத்திரம்சூழ் - சத்திரங்கள் சூழ்ந் திருக்கும், புலியூர் - திருப்புலியூரானது, பை அரவு-படத்தை யுடைய பாம்புகள், மீது ஆம் - மேலேயாகிய, புயத்தினர்-திருப்புயங்களை யுடையவரும், மிக்க - வலிமைமிகுந்த, முயல் மேல் அழுத்தும்-முயலகன் மீதழுத்திய, பாத அம்புயத்தினர்-திருவடித் தாமரையை யுடையவருமாகிய நடேசப்பெருமானுடைய, பற்று - இடம். (93)

மாற்புணர்ந்து நீறணிந்து மாமதிமே லிட்டுயர்ந்தோர்
போற்பலமா டஞ்சேர் புலியூரே — சூற்பெறுவெண்
கோடுந் தலைவளைப்பார் கூப்பமறைச் சேய்க்கயன்முன்
றேடுந் தலைவளைப்பார் சேர்வு.

(இ-ள்) மால் புணர்ந்து - மேகத்தையளாவி, நீறு அணிந்து - சுண்ணச்சாந்தினு லலங்கரிக்கப்பட்டு, மாமதி- பெருமைபொருந்திய சந்திரனை, மேல் இட்டு-மேற்கொண்டு, (இதனால்) மால்புணர்ந்து - பெருமையைப்பொருந்தி, நீறு அணிந்து - விபூதியைத்தரித்து, மாமதி-நுண்ணிய அறிவை, மேல்இட்டு-மேலாகக்கொண்டு, (இருக்கின்ற) உயர்ந்தோர் போல்-மேலோர்களைப்போல, பலமாடம்-அநேகமாடங்கள், சேர் - நெருங்கிய, புலியூர் - திருப்புலியூரானது, சூல்பெறு- சூல்கொண்ட, வெண் - வெண்மையாகிய, கோடு - சங்கு களை, உந்து - ஒதுக்கும், அலை-(சூழ்ந்த) கடலைபுடைய, வளை- வட்டமாகிய, பார் - உலகிலுள்ளோர், கூப்ப - கைகுவிக்க, மறைச்சேய்க்கு - பிராமணச் சிறுவர்பொருட்டு, அயன்- பிரமதேவன், முன்-முன்பு, தேடும் - (அன்னவுருக்கொண்டு) தேடிய, தலை-திருமுடியை, வளைப்பார்-வளைக்கும் இயல்பை யுடைய நடேசப் பெருமான், சேர்வு - சேருமிடம். (94)

எப்போது நன்மணந்தோய்ந் தேற்பவர்க்கிட் டைந்தருவோப்
புப்பேசும் வீதிப் புலியூரே — மெய்ப்பான
நந்திப் பரியார் நளினத் தயனரிக்குஞ்
சந்திப் பரியார் தலம்.

(இ-ள்) எப்போதும் - எக்காலத்திலும், நல் மணம் தோய்ந்து - நன்மையாகிய கலியாணங்களைப் பொருந்தி, ஏற்பவர்க்கு-இரப்பவர்க்கு, இட்டு - கொடுத்து, (இதனால்) எப்போதும்-எக்காலத்திலும், நல்மணம் தோய்ந்து-நன்மை யாகிய வாசனையைப் பொருந்தி, ஏற்பவர்க்கு - இரப்ப வர்க்கு, இ
பேசும-ஒத்
புலியூரான
இடமாகி
மலரில் வ

*விஷ்ணுமூர்த்திக்கும், சந்திப்பு அரியார்-சந்தித்தற் கரியவரு மாகிய நடேசப் பெருமானுடைய, தலம்-திருநகர்.* (95)

சோபனத்தைச் சேர்ந்துசெங்கோற் றூக்கியுயர் தோரணந்தாள்
பூபதிக்கோப் பாகும் புலியூரே — தாபரவெண்
டிக்கெனுமா சாரத்தார் சிட்டர்நெஞ்சுட் டித்திக்கு
மிக்கெனுமா சாரத்தா ரில்.

*(இ—ள்) சோபனத்தைச் சேர்ந்து-படிகளைப் பொருந்தி, செங்கோல் தூக்கி-ஒழுங்காகிய கொமபிலே தூக்கப்பட்டு, உயர்-உயர்ந்த, தோரணம்-தோரணமானது, சோபனத்தை-சுபகரத்தை, சேர்ந்து-அடைந்து, செங்கோல்தூக்கி - செங் கோலின்படி ஆராய்ந்து, உயர்-உயர்ந்த, பூபதிக்கு - அரசனுக்கு, ஒப்பு ஆகும்-ஒத்திருக்கும், புலியூர் - திருப்புலியூரானது, தாபரம்-நிலையாயுள்ள, எண்திக்கு என்னும் - எட்டுத் திசையென்கின்ற, ஆசாரத்தார்-வஸ்திரத்தை யுடையவரும், சிட்டர்-ஞானிகளுடைய, நெஞ்சுள்-மனத்தில், தித்திக்கும்-தித்திக்கா நின்ற, இக்கு என்னும்-கருப்பஞ்சாற்றை ஒத்த, மா - பெரிய, சாரத்தார் - சாரமாயுள்ளவருமாகிய நடேசப் பெருமானுடைய, இல்-திருக்கோயில்.*

*சோபானம்-சோபனம் எனவந்தது விகாரம்.* (96)

அம்மழைக்கண் ணுற்காலா லாடுதலாற் கேதனங்கள்
பொம்மன்முலை யாராம் புலியூரே — சம்மதியாய்ப்
பொங்கரவி னன்பணிவார் பொற்சடைக்கிட் டோர்கிரணச்
செங்கரவி னன்பணிவார் சேர்வு.

*(இ—ள்) அம் மழைக்கு-அழகிய மேக மண்டலத்துக்கு, அண்ணல் - கிட்டுதலால், காலால் ஆடுதலால் - காற்றால் அசைதலால், கேதனங்கள் - கொடிகள், அம் - அழகிய, மழை-மேகம் போன்ற, கண்ணால்-கண்களாலும், காலால் - கால்களாலும், ஆடுதலால்-ஆடுதலாலும், பொம்மல்-பருத்த,*

முலையார்ஆம்-தனத்தையுடைய நாட்டியப்பெண்களை ஒத்தி ருக்கின்ற, புலியூர் - திருப்புலியூரானது, சம்மதியாய் - சம் மதித்து, பொங்கும் - கோபிக்கும், அரவின் - பாம்பாகிய, நல்பணி-நல்ல ஆபரணத்தை, வார்-நீண்ட, பொன் - பொன் போன்ற, சடைக்கு இட்டோர் - சடையிலே தரித்தவரும், கிரணம் செம்கரம் - சிவந்த கிரணத்தையுடைய, இனன் - சூரியனால், பணிவார் - பணியப்பட்டவருமாகிய நடேசப் பெருமானுடைய, சேர்வு-இடம். (97)

மாலகல முற்று மணிவடம்பூண் டிந்திரையாள்
போலிரத மூரும் புலியூரே – பாலனைக்கோல்
வானகத்தை யூன்றினார் வாளரக்கன் மாமுடிமேற்
கானகத்தை யூன்றினார் காப்பு.

(இ–ள்) மால்-பெருமையையும், அகலம்-விசாலத்தையும், உற்று-பொருந்தி, மணி-மணிகளையும், வடம் - வடங்களையும் பூண்டு-பூண்டு, (இதனால்) மால் - விஷ்ணுமூர்த்தியினுடைய, அகலம்-மார்பினை, உற்று-பொருந்தி, மணி வடம் பூண்டு-முத் தாரத்தைப் பூண்டு,(இருக்கும)இந்திரையாள் போல்-திருமக ளைப்போன்ற, இரதம்-தேர், ஊரும்-ஊர்கின்ற, புலியூர்-திருப் புலியூரானது, பாலனைக்கொல்வான்-சிறுத்தொண்ட நாயனா ரது, அகத்து-திருமனையில், ஐ - அழகிய, ஊன் - தசையை, தினார் - தின்றவரும், வாள் அரக்கன் - வாளேந்திய இராவணனது, மா-பெருமைவாய்ந்த, முடிமேல் - சிரத்தின் மேல், கால் - திருவடியிலுள்ள, நகத்தை - பெருவிரல் நகத் தினை, ஊன்றினார் - ஊன்றினவராகிய நடேசப் பெருமானு டைய, காப்பு-காவலிடம். (98)

செல்வந் திருந்திடலாற் சேர்முடத்தாற் பிங்கலனோர்
புல்லுந்தேங் கோங்கும் புலியூரே – மெல்லிதழ்வாய்

விண்ட கடுக்கையார் மேனு ளமரருக்கா
வுண்ட கடுக்கையா ரூர்.

(இ—ள்) செல்வந்து - மேகம்வந்து, இருந்திடலால் - பொருந்துதலாலும், சேர்-பொருந்திய, முடத்தால் - முடத்தினுலும், செல்வம் - செல்வங்கள், திருந்திடலால் - நிறைதலாலும், சேர்முடத்தால் - பொருந்திய முடத்தினுலும், பிங்கலன் - குபேரனை, நேர்புல்லும் - ஒத்த, தெங்கு - தென்னமரங்கள், ஓங்கும் - வளர்ந்திருக்கின்ற, புலியூர் - திருப்புலியூரானது, மெல்இதழ் - மெல்லிய இதழ்கள், வாய்விண்ட - மலர்ந்த, கடுக்கையார்-கொன்றை மாலையைத் தரித்தவரும், மேல்நாள்-முன்னுள், அமரருக்கா-தேவர்களைக் காத்தற்காக, உண்ட-அருந்திய, கடு-விடத்தை, கையார்-வெறுத்துவிடாதவருமாகிய நடேசப் பெருமானுடைய, ஊர்-திருநகர். (99)

மாகமண்ட லந்தாங்கி வண்டமிழ்பூத் தாறுவிட்டுப்
பூகமுங்கும் பன்சீர்ப் புலியூரே — யாகமங்கள்
கூறிடுமா வாக்கினுர் கூடலிறைக் காநரியை
ஏறிடுமா வாக்கினு ரில்.

(இ—ள்) மாகமண்டலம் - விண்ணுலகத்தை, தாங்கி - சுமந்து, வண்-வளப்பமாகிய, தமிழ்-இனிமை பொருந்திய, பூத்தாறுவிட்டு-பூங்குலைகளைவிட்டு, பூகமும்-கமுகுகளும், மா-பெருமை பொருந்திய, கமண்டலம்-கமண்டலத்தை, தாங்கி-ஏந்தி, வண்தமிழ்பூத்து-வளமை வாய்ந்த தமிழை யுண்டாக்கி, ஆறுவிட்டு - காவிரிநதியை விட்டு, கும்பன்சீர் - அகத்திய முனிவரது தன்மை பொருந்திய, புலியூர் - திருப்புலியூரானது, ஆகமங்கள்-சிவாகமங்களை, கூறிடும்-சொல்லியருளிய, மா - பெருமைபொருந்திய, வாக்கினர்-திருவாயினையுடையவரும், கூடல் இறைக்கா - மதுரைக்கரசனுகிய அரிமர்த்தன பாண்டியனுக்காக, நரியை-நரிகளை, ஏறிடும்-ஏறுகின்ற, மா ஆக்

*கினர்-குதிரைகளாகச் செய்தவருமாகிய நடேசப் பெருமா னுடைய இல்-திருக்கோயில்.* (100)

---

மன்னுபுலி யூர்க்கு வகுத்தவெண்பா நூறவற்றி
லுன்னி லிருபத்தைந் தோர்வயனம் – பின்னுமுள
வையைந் தோருவயன மையைந் தோருவயன
மையைந் தோருவயன மாம். (*வயனம் – வகை*)

*திருப்புலியூர் வெண்பா மூலமும் உரையும்*
*முற்றிற்று.*



உ

சிவ சிவ

திருப்பனந்தாள் ஸ்ரீ காசிமடத்துத் தலைவர்

ஸ்ரீ-ல-ஸ்ரீ காசிவாசி

# அருள்நந்தித் தம்பிரான் சுவாமிகள் அவர்கள்

நிறுவிய தருமங்கள்

| | | | முதற்பொருள் ரூபாய் |
|---|---|---|---|
| 1. *திருமுறை வளர்ச்சிக்கு ஆக* 30 *தருமங்கள்* | .... | ரூ. | 4,99,500 |
| 2. *கல்வி அபிவிருத்திக்கு ஆக* 48 *தருமங்கள்* | .... | ரூ. | 7,49,200 |
| 3. *சைவசித்தாந்தம் பரப்ப* 7 *தருமங்கள்* | .... | ரூ, | 1,56,000 |
| 4. *அன்னதானம் செய்ய* 125 *தருமங்கள்* | ... | ரூ. | 29,92,800 |
| 5. *வைத்தியம் செய்ய* 5 *தருமங்கள்* | .... | ரூ. | 1,22,500 |
| 6. *பொது தருமங்கள் - ஸ்நானக் கட்டம், அகதி, நன்கொடை தண்ணீர்ப் பந்தல், ஒளிவளர் விளக்குகள், பசுப் பரிசு, கோ சம்வர்த்தனம், கல்லெழுத்து முதலிய* 65 *தருமங்கள்* | .... | ரூ. | 6,10,745 |
| *ஆகத் தருமங்கள்* 280 | ... | ரூ. | **51,30,745** |

குமரகுருபரன் அச்சகம், ஸ்ரீவைகுண்டம். 4-'59.

| | | ரூ. | ந.பை |
|---|---|---|---|
| 29 | திருக்குறள் அறத்துப்பால் ஆங்கில மொழி பெயர்ப்பு | ... 1 | 50 |
| 30 | திருக்குறள்–பொருட்பால் ,, | ... 2 | 50 |
| 31 | திருக்குறள்–காமத்துப்பால் ,, | ... 1 | 00 |
| | ஷை 29, 30, 31 திருக்குறள் 3 புத்தகமும் சேர்த்து வாங்கினால் கிரயம் | ... 4 | 00 |
| 32 | திருக்குறள் தமிழ்மறை K. M. வேங்கடராமையா M. A., B. O. L., அவர்கள் குறிப்புரையுடன் | ... 0 | 75 |
| 33 | பழமொழி மேல் வைப்பு | ... 0 | 75 |
| 34 | திருவுசாத்தானக் கல்வெழுத்துக்கள் | ... 0 | 37 |
| 35 | திருச்செந்தூர்க் கந்தர் கலிவெண்பா- மதுரை மீனாட்சியம்மை பிள்ளைத் தமிழ்- மதுரைக் கலம்பகம்-நீதிநெறிவிளக்கம்- மதுரை மீனாட்சியம்மை இரட்டைமணி மாலை-மதுரை மீனாட்சியம்மை குறம் | ... 2 | 75 |
| 36 | திருவாரூர் நான்மணிமாலை-முத்துக் குமாரசுவாமி பிள்ளைத் தமிழ் | ... 1 | 25 |
| 37 | சிதம்பர மும்மணிக்கோவை-சிதம்பரச் செய்யுட்கோவை-தில்லைச் சிவகாமியம்மை இரட்டைமணிமாலை | ... 1 | 00 |
| 38 | பண்டார மும்மணிக்கோவை-காசிக் கலம்பகம்-சகலகலாவல்லிமாலை | ... 1 | 00 |
| 39 | சிதம்பரச் செய்யுட் கோவை | ... 0 | 75 |
| 40 | முத்துக்குமாரசாமி பிள்ளைத்தமிழ் | ... 1 | 00 |
| 41 | தமிழிசைப் பாக்கள் | ... 0 | 50 |
| 42 | பெரிய புராணம்-உரைநடை | ... 2 | 00 |
| 43 | திருவிளையாடற் புராணம்-உரைநடை | ... 2 | 25 |
| 44 | குமரகுருபர சுவாமிகள் ஜீவிய சரித்திரப்பட விளக்கங்களும் கந்தர்கலிவெண்பா விளக்கப்படங்களும் | ... 0 | 50 |
| 45 | அபிராமி பட்டர் பிரபந்தம் (மூலம் மட்டும்) | ... 0 | 31 |
| 46 | திருக்குறள்-உரைக்கொத்து அறத்துப்பால் (இரண்டாம் பதிப்பு) | ... 1 | 37 |

மேலே கண்ட நூல்கள் கிடைக்குமிடங்கள்:-

1. ஸ்ரீ குமரகுருபர சுவாமிகள் கலைக்கோவில், ஸ்ரீவைகுண்டம் P.O.
2. "தியாகராஜ விலாஸ்" 53, பிள்ளையார் கோவில் தெரு, திருவல்லிக்கேணி, சென்னை-5

குறிப்பு:- ஷை விற்பனைத் தொகை 'குமரகுருபரன்' பத்திரிகையைச் சாரும்.